பொருளடக்கம்

## முதலாளி (1)

திருச்செங்கோடு, ஒரு பாடல் பெற்ற ஸ்தலம். அதன் தல புராணம் மிகவும் பிரசித்தம். திருச்செங்கோட்டின் மலை மீது இருந்து ஆட்சி புரிபவர்கள் இருவர். அப்பனும், மகனும் தான். அப்பன் அர்த்தநாரீஸ்வரர், மகன் வேலவன். அப்பனும், அம்மையும் ஒரே உருவில் காட்சியளிக்கும் இடம் அது. ஆனால், கீழே கைலாசநாதரின் கொடி பறக்கிறது. மலை ஏறும் முன், நீங்கள் கீழே உள்ள ஆறுமுக சாமியை தரிசித்து விட்டு தான் போக வேண்டும்.



அன்று இந்த ஊர் மிகவும் சிறியது. ஆனால், இன்று நாகரிகம் வளர்ந்து விட்ட நிலையில், ஊரும் தன்னை விருத்தி செய்து கொண்டது. சென்ற நூற்றாண்டில், இந்த ஊருக்கு பெருமை சேர்த்தவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் ராஜாஜி, சுப்பராயன் மற்றும் ராமலிங்க முதலியார் ஆகியோர் தான். காந்தி ஆசிரமத்தை நிறுவியதால், ராஜாஜியும், அரசியலால் சுப்பராயனும் பெயர் பெற்றனர். தன் வியாபார திறமையால், ராமலிங்க முதலியார் பேசப்பட்டார்.

அந்த ஊரில் இருந்து கொண்டே திருப்பூர், கோவை, மதுரை, ஈரோடு, சேலம் என்று, பல ஊர்களில் கடைகளை வைத்து, மில்களில் இருந்து நேரடியாக நூல் வாங்கி, மொத்த வியாபாரம் செய்தார். 'வி.வி.சி.ராமலிங்க முதலியார் சன்ஸ்' என்பது அவரது நிறுவனத்தின் பெயர்.

ஒழுங்கு, நேர்மை, தெய்வபக்தி, நாணயம் இவை அவரது வியாபாரத்தின் மூல மந்திரம். வி.வி.சி.ஆர்., என்றாலே, எழுந்து நின்று மரியாதை கொடுத்த பெயர் அது.

அந்த வள்ளல் பெற்றெடுத்த மக்கள் ஐவர். முதல் மகன் சிறுவயதிலேயே அதாவது, தம் 48 வயதிலேயே இறந்து விட்டார். அவரது பெயர் கந்தப்ப முதலியார். உயிரோடு இருந்தவரை, அவர் தம் தந்தையுடன் நூல் வியாபாரத்தில் தான் ஈடுபட்டிருந்தார். வீட்டில் இவருக்கு மட்டும் காங்கிரஸ் கட்சியில் ஈடுபாடு அதிகம். இன்னொருவர், சின்னப்ப முதலியார். அவரும் இளம் வயதிலேயே இயற்கை எய்தி விட்டார். அவருக்கு இளையவர், வையாபுரி முதலியார். திருச்செங்கோட்டில், "புள்ளிகார் மில்ஸ்' என்ற புகழ்பெற்ற நூற்பு ஆலையை நிறுவி, ஏராளமான குடும்பங்களுக்கு உதவியவர்.

அவருக்கு இளையவர் தான், சைவப் பெருவள்ளல் என்று, இன்றும் போற்றி புகழுகிற முருகேச முதலியார். இவரை போல, தெய்வ பக்தி கொண்டவர்கள் அக்காலத்தில் மிக சிலரே. இவருக்கும் தொழில், நூல் வியாபாரம் என்றாலும், தம் வருவாயில் பெரும்பகுதியை, இவர் இறைவன் பணிக்கே அர்ப்பணித்தார் என்பதே உண்மை. அந்த காலத்திலேயே இவர் பல கோவில்களுக்கு தர்மகர்த்தாவாக இருந்தார். பழனி கோவிலுக்கு, 25 ஆண்டு காலம் அவர் நிர்வாக அறங்காவலராக இருந்தார். அந்த சமயத்தில் முருகனுக்கு தங்கத் தேர், தங்க மயில், தங்க வேல் போன்றவற்றை செய்ததில் இவருக்கு பெரும் பங்குண்டு.

மதுரை மீனாட்சி அம்மன் கோவில், திருச்செந்தூர் முருகன் கோவில் போன்ற ஸ்தலங்களிலும் இவர் அறங்காவலராக பணியாற்றியுள்ளார். திருப்பதியில் பயணிகள் தங்குவதற்கு, விடுதி கட்டிக் கொடுத்த இவர், திருச்செங்கோடு மலைக் கோவிலுக்கும் முதல் முதலாக மின் இணைப்புக்கு ஏற்பாடு செய்தார். மலைப் படிக்கட்டுகளில் இப்போது விளக்கு எரிவது இவரது உபயத்தினால் தான். திருத்தணியில், படி, மண்டபம் கட்டிய இவர், தாம் செய்த காரியங்களுக்காக, விளம்பரம் தேடிக் கொண்டதே இல்லை. அப்படிப்பட்ட உத்தமரின் தம்பி தான் டி.ஆர்.சுந்தரம். வி.வி.சி.ஆர். ராமலிங்க முதலியாரின் ஐந்தாவது மகன். ஜூலை, 16, 1907ல், திருச்செங்கோட்டில் பிறந்தார். டி.ஆர்.எஸ்., தன் இளமைக் காலத்தை திருச்செங்கோட்டில் கழித்தாலும், பட்டப் படிப்பிற்காக சென்னை வந்தார். படிப்பில் எப்போதுமே அவர் சோடை போனதில்லை. புத்திக் கூர்மையுள்ளவர். எதையும் ஆராய்ந்து அறியும் எண்ணம் கொண்டவர் என்று பெயர் பெற்றவர். சென்னையில், அவர் பிரசிடென்சி கல்லூரியில், பி.ஏ., படிப்புக்காக சேர்ந்தார். வெற்றிகரமாக பட்டம் பெற்றவுடன், அவரது குடும்பத்தாருக்கு ஓர் ஆசை. நூற்பு ஆலைகளிலும், நூல் வியாபாரத்திலும் சிறந்து விளங்கிய அக்குடும்பம், தங்களின் ஒரு வாரிசு, அயல்நாட்டிற்கு சென்று நூல்களுக்கு கலர் சேர்க்கும் கலை பற்றிய படிப்பை படிக்க வேண்டும் என்கிற எண்ணத்துடன், டி.ஆர்.எஸ்.,சை லண்டனுக்கு அனுப்பினர். அப்போது லண்டனில் மான்செஸ்டர் நகரில் மட்டும் தான் இத்தொழில் சிறந்து விளங்கியது. டி.ஆர்.எஸ்., லண்டன் சென்றார். நன்றாகவே படித்து பட்டம் பெற்றார். அத்துடன் காதல் வயப்பட்டும் விட்டார். தங்களுடைய புதல்வனுக்கு நல்ல விதத்தில் திருமணம் நடத்த வேண்டும் என்று நினைத்திருந்த குடும்பத்தாரின் ஆசையை நிராசையாக்கி, தன்னுடைய லண்டன் மனைவியுடன் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். சட்டப்படி நடந்த திருமணம் அது.

தங்களது மகன் இவ்வாறு செய்து விட்டானே என்று யாரும் அவர் மீது கோபப்படவில்லை. சேலத்தில் அவர்களை மாலையிட்டு வரவேற்றது, சகோதரர் முருகேச முதலியார் தான். அன்பாக வரவேற்றனர். அவர் மனதிற்கு பிடித்த பெண்ணை திருமணம் செய்து கொள்வதில் தவறே இல்லை என்பது அவர்கள் முடிவு.

இந்தியாவுக்கு வந்தவுடன், தன் படிப்பிற்கு தகுந்தாற்போல், நூற்பு ஆலையை துவங்க வேண்டும் என்கிற எண்ணம் அவருக்கு எழவில்லை. மாறாக, அவரது கவனம் வேறுபக்கம் திரும்பியது. அப்போது, அதாவது அவர் தன் மனைவியுடன் சேலத்திற்கு வந்து சேர்ந்த போது, 1933ல், சேலத்தில், ஏஞ்சல் பிலிம்ஸ் எனும் கம்பெனி, சினிமா படங்களை தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தது. படங்கள் எடுக்க வேண்டும் என்றால்,

அப்போதெல்லாம் கல்கத்தாவிற்கு போக வேண்டும். தமிழகத்தில் எந்த வழியும் இல்லை. ஏஞ்சல் பிலிம்ஸ் பாகஸ்தர்களான வேலாயுதம் பிள்ளை, சுப்பராய முதலியார் ஆகியோருடன், டி.ஆர்.எஸ்.,சும் கூட்டுச் சேர்ந்து படம் எடுக்க துவங்கினார்.

கடந்த, 1933-1935 வரையிலான அந்த இரு ஆண்டுகளில், இரண்டு படங்கள் எடுத்தனர். படங்கள் சுமாராக போயிற்று என்றாலும், அதற்கு பட்ட கஷ்டங்கள் இருக்கிறதே, அதை சொல்லியோ, எழுதியோ மாளாது. எதற்கெடுத்தாலும் கல்கத்தாவிற்கு போக வேண்டும் என்கிற நிலை, டி.ஆர்.எஸ் .,சுக்கு அலுப்பு தட்டியது. அந்த சவுகர்யங்களை சேலத்திலேயே செய்து கொண்டால் என்ன என்று, அவர் தீவிரமாக யோசித்தார். அதன் விளைவு தான், 'மாடர்ன் தியேட்டர்ஸ்' என்கிற ஸ்டுடியோவின் உதயம்.

சேலம்-ஏற்காடு மலை அடிவாரத்தில் முதலில் பத்து ஏக்கர் நிலம் வாங்கினார். இது நடந்தது, 1935ல். ஸ்டுடியோவுக்குள் நுழைந்தால், படப்பெட்டியுடன் தான் வெளியே போக வேண்டும் என்கிற எண்ணத்தை அப்போதே மனதில் தேக்கி செயல்பட ஆரம்பித்தார். படப்பிடிப்பு தளம், படப்பிடிப்புக்கான உபகரணங்கள் - பரிபூரணமான ஒரு லேபாரட்டரி, சங்கீத பதிவுக்கு ஒரு ரிக்கார்டிங் அறை. எடுத்தவரை படத்தை போட்டு பார்க்க ஒரு சிறு பிரிவியூ தியேட்டர். இவ்வளவையும் அவர் அந்த ஸ்டுடியோவிற்குள் நிர்மாணித்தார். 1935ல், இது ஒரு அசுர சாதனை என்று தான் சொல்ல வேண்டும். முன் வைத்த காலை பின் வைக்கும் பழக்கமும் அவரிடம் இல்லை. தன் மனதிற்கு சரி என்று பட்டதை அவர் செய்யாமல் விட்டதில்லை. ஸ்டுடியோ, தியேட்டர் வேலைகள் எல்லாம் முடிவடைந்த பின் தான், தயாரிப்பு வேலைகளில் அவர் ஈடுபட ஆரம்பித்தார். 1936ல், ஸ்டுடியோ முழுமை பெற்று விட்டது என்றாலும், தயாரிப்பை துவக்கியது 1937ல் தான்.

கல்கத்தாவில் தயாரித்த கிருஷ்ண லீலா, பரசுராமர், நல்ல தங்காள் போன்ற படங்கள் தான், இவர் ஸ்டுடியோ ஆரம்பிப்பதற்கு அடித்தளம் அமைத்து கொடுத்தன என்றால், அது நிதர்சனமான உண்மை. முதல் படம், "சதி அகல்யா!'
இப்போதெல்லாம் தமிழ்படங்களில் நடிக்க, நடிகையர்களை தேடி, கர்நாடகா, ஆந்திரா, மும்பை போன்ற இடங்களுக்கு தயாரிப்பாளர்கள் போகின்றனர். இதில், முதல் புரட்சியை, டி.ஆர்.எஸ்., தன் முதல் படத்திலேயே ஆரம்பித்து விட்டார்.
கதாநாயகியை தேடி, அவர் இலங்கைக்கு சென்றார். அவர் அங்கே சென்ற போது, அவரது கண்களில் பட்ட பெண் தான் சிங்களக் குயில் தவமணி தேவி!

தவமணி தேவிக்கு, டி.ஆர்.எஸ்., கொடுத்த வேடம் என்ன தெரியுமா? பதிவிரதா சிரோன்மணியான, "சதி அகல்யா' வேடம். அப்போதெல்லாம் பத்திரிகைகளில் நீச்சல் உடையில் அதிகமாக காணப்பட்ட தவமணி தேவியை, இப்படிப்பட்ட ஒரு தெய்விக பாத்திரத்திற்கு போட துணிச்சல் வேண்டும்.
அது நம்மவருக்கு நிறையவே இருந்தது. ரிஷி பத்தினியான, "அகல்யா வேஷத்தை கொடுத்து, தவமணியை அதில் நடிக்க வைத்தார். நன்றாக வேலை வாங்கினார் என்று தான் சொல்ல வேண்டும். அந்த படம் திரையிட்ட போது, மக்கள் ரிஷிபத்தினியை தான்

பார்த்தனர். நீச்சல் உடை தவமணி தேவியை பார்க்கவில்லை. படம் பெரும் வெற்றி பெற்றது. முதல் படத்திலேயே அவர் தம் புரட்சிகரமான வேலையை ஆரம்பித்து விட்டார் அதை தொடர்ந்து வந்த படங்கள் தான், 'பத்மஜோதி' எனும் தமிழ்படமும் "புரந்தரதாஸ்' எனும் கன்னடப் படமும்.
இவற்றுக்கு பின், 1938ல் எடுத்த படம் தான், "பாலன்' எனும் மலையாளப் படம், மலையாளத்தில் முதல் பேசும் படம். கேரள மாநிலமெங்கும் அது திரையிடப்பட்டது. முதல் மலையாளப்படமும் வெற்றிப்படம் என்று தான் சொல்ல வேண்டும்.
இதனால், தென்னகத்தில் தமிழ் மற்றும் பிற மொழிகளில் படங்களை தயாரிக்க ஆரம்பித்த முதல்வர்களில், இவர் மிகவும் முக்கியமானவர் எனலாம். இதை யாரும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாது. பேசும் படங்கள் பல தொடர்ச்சியாக வெளிவந்த நேரம் அது. அப்போதைய தமிழ் பட உலகில், நூறாவது பேசும் படமாக, "பக்த நாமதேவர்' என்கிற படத்தையும் தயாரித்த பெருமை இவருக்குண்டு.
தமிழகத்தில், முதல் முதலாக சண்டை படத்தை அறிமுகப்படுத்திய பெருமை, டி.ஆர்.எஸ்.,சையே சாரும். அப்படி அவர் தயாரித்ததற்கு இன்னொரு முக்கியமான காரணமும் உண்டு. பக்தி படங்களுக்கு மார்க்கெட் குறைந்த நேரம் அது. இது எடுத்த ஆண்டு, 1938.

அவர் எடுத்த ஸ்டன்ட் படத்தின் பெயர், "மாயா மாயவன்'. இதை நொட்டானி என்பவர் டைரக்ட் செய்தார். இதன் கதாநாயகன், டி.கே.சம்பங்கி எனும் நாடக நடிகர். இந்தப் படமும் நன்றாகவே ஓடியது. இதை தொடர்ந்து, தண்டபாணி தேசிகர், தேவசேனா நடித்த, 'தாயுமானவர்' எனும் படத்தை, டி.ஆர்.எஸ்., டைரக்ட் செய்து வெளியிட்டார். தேசிகரிடம் டைரக்டர் வைத்திருந்த அபிமானத்தின் காரணத்தினால், இப்படம் எடுக்கப்பட்டது என்றே சொல்லலாம்.

அதன் பின், டி.ஆர்.எஸ்., தன் கவனத்தை ஆங்கிலக் கதைகளின் பக்கம் திருப்பினார். அதன் விளைவு தான், "சந்தனத் தேவன்' படம். ஆங்கில கதையான, "ராபின்ஹுட்' படத்தை தழுவியது. அந்தப் படத்தின் கதாநாயகன், ஜி.எம்.பஷீர். இந்தப் படம் மிகவும் நன்றாக ஓடியது. தமிழ் மக்களுக்கு புதிய விருந்து. இதற்கு முன் ஸ்டுடியோஆரம்பித்த போது, அவர் செய்த புரட்சியை குறிப்பிட்டாக வேண்டும்.

# முதலாளி (2)

சேலத்தில் ஸ்டுடியோவை ஆரம்பிக்கும் முன்னரே, படப்பிடிப்பு நிலையத்திற்கு முக்கியமான தேவை என்னவென்று அவர் தெரிந்து வைத்திருந்தார். 1935ம் வருடமே, படப்பிடிப்புக்காக அவர் ஜெர்மன் நாட்டிலிருந்து, இரண்டு சிறந்த, 'கேமராமேன்'களை வரவழைத்து தன்னுடன் வைத்துக் கொண்டார். இதற்கு சர்க்கார் அனுமதியையும் பெற்றுக் கொண்டார். ஒருவரின் பெயர், 'போடோ கூச் வாக்கர்' இன்னொருவரின் பெயர், 'பேய்ஸ்' இருவரும் தந்திரக் காட்சிகளை எடுப்பதில் நிபுணர்கள். சதி அகல்யாவிலிருந்து தொடர்ந்து வந்த புராணப் படங்களில் காணப்பட்ட தந்திரக் காட்சிகளை எடுத்தவர்கள் இவர்கள்தான்.



மாடர்ன் தியேட்டர்சாரின் படம் ரிலீஸ் ஆகிறது என்றால், படம் ஆரம்பத்திலிருந்தே பார்க்க வேண்டும் என்கிற ஆர்வத்துடன் மக்கள் வருவர். அதற்குக் காரணம், படத்தின், 'டைட்டில்கள்!' ஒவ்வொரு படத்தின் டைட்டிலும், அவ்வளவு அற்புதமாக அமைந்திருக்கும். படத்திற்கு படம் வித்தியாசமான டைட்டில் கார்டின் வேலையும் ஆரம்பமாகி விடும். ஒரு படத்தின், 'டைட்டில்' எடுக்க, பத்தாயிரம் செலவு என்றால், அதை விடப் பலமடங்கு செலவு செய்து, "டைட்டிலை' தன் திருப்திக்கு எடுக்க வைப்பார். அவரது மனதில் திருப்தி ஏற்படும் வரை, கேமராமேன்களும் சலிக்காமல் உழைப்பர்.

டைட்டில்களை காண்பிப்பதில் புதுமையைச் செய்தவர், டி.ஆர்.எஸ்., தான் என்பதை யாராலும் மறுக்க முடியாது. இந்த விஷயத்திற்கு அஸ்திவாரமிட்டவர் கள் அந்த இரு ஜெர்மன் கேமராமேன்கள் தான். அவர்களுக்கு உதவியாளர்களாக நம் தமிழகத் தொழில் நிபுணர்களையே டி.ஆர்.எஸ்., நியமித்தார். அவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் டபிள்யூ.ஆர் சுப்பாராவ், ஜே.ஜி.விஜயம் ஆகிய இருவர் மட்டுமே. இவர்கள் தந்திரக் காட்சிகளில் நிபுணர்களாக திகழ்ந்தனர்.

மாடர்ன் தியேட்டர்சில் தொழில் கற்று, பின்னால் பெரும் டைரக்டர் ஆன கேமராமேன்களில் மிகவும் முக்கியமானவர்கள் ஜி.ஆர்.நாதன், மஸ்தான்,

ஆர்.எம்.கிருஷ்ணசாமி மற்றும் எஸ்.டி.லால் ஆகியோர். இந்த இரண்டு ஜெர்மன் கேமராமேன்களும், படப்பிடிப்பு சம்பந்தமாக, சேலம் நகரத்தை விட்டு, 6 கி.மீ.க்கு அப்பால் செல்ல வேண்டும் என்றால், கலெக்டரிடம் அனுமதி வாங்க வேண்டும். அதையும் டி.ஆர்.எஸ்., சுணங்காமல் செய்தார். ஆரம்பத்தில் குறிப்பிட்டது போல, ஒவ்வொரு படத்திற்குப் பின்னாலும், டி.ஆர்.எஸ்.,சின் கடினமான உழைப்பு இருந்தது. அதற்குக் காரணம், அவர் தனக்குத்தானே வகுத்துக் கொண்ட கட்டுப்பாட்டு முறை.

தினமும் காலையில் மாடர்ன் தியேட்டர்ஸ் ஆபீசில், அவரது கார் நுழையும்போது, மணி சரியாக 9:30 என்பது உறுதி. "ராமலிங்க விலாஸ்' என்று, அவரது தந்தையின் பெயரில் இருந்த அந்தப்பெரிய பங்களாவில் தான், காரியாலயம் இருந்தது. இரண்டு ஏக்கர் நிலத்தின் நடுவே அமைந்திருந்த அக்கட்டடம்தான், ஸ்டுடியோவின் ஜீவநாடி. படத்தயாரிப்பு ஸ்டுடியோவில் என்றாலும், நிதி நிர்வாகம், பட வெளியீடு சம்பந்தமான வேலைகள் இங்கே தான் கவனிக்கப்பட்டது.

தினந்தோறும் வரும் கடிதங்களை, அவர் படித்துவிட்டு பதிலை டைப்பிஸ்டுகளை அழைத்து, "டிக்டேட்' செய்வார். அப்போது இங்கு டைப்பிஸ்ட்டாக வேலை செய்தவர் டைரக்டர் முக்தா சீனிவாசனின் மூத்த சகோதரர் முக்தா ராமசாமி. இவர்கள் இருவருந்தான் பின்னாளில் முக்தா பிலிம்ஸ் என்கிற படக் கம்பெனியை துவங்கி, பல தமிழ்ப்படங்களை எடுத்தவர்கள்.

அடுத்தபடியாக, டி.ஆர்.எஸ்., வருவது, 'ரிகர்சல் ஹால்' எனும் புரொடக்ஷன் காரியாலயத்திற்கு. அருகே ஒரு பெரிய பங்களா. அதற்கு எதிரே பெரியதொரு பந்தல். அந்தப் பந்தலில் தான், மியூசிக் ரிகர்சல் நடக்கும். அங்கு ஒத்திகை முடிந்ததும், மறு நாள் படப்பிடிப்புக்கான நடிகர், நடிகையர் ஒத்திகை. மாடர்ன் தியேட்டர்ஸ் வரலாற்றில், முதலில் காட்சி அமைப்புகளை நன்றாக ஒத்திகை பார்க்காமல், படப்பிடிப்புக்கு போனதாக ஆரம்பகால சரித்திரமே இல்லை எனலாம். சில நாட்களில், அந்த ஒத்திகையை டி.ஆர்.எஸ்., பார்ப்பதுண்டு. இதெல்லாம் தினந்தோறும் வாடிக்கையாக நடக்கும் வேலை என்று தான் சொல்ல வேண்டும். மாடர்ன் தியேட்டர்சுக்கு என்று, நிரந்தரக் கதாசிரியர்கள் உண்டு. சில நாட்களில், அவர்களிடமும், "டிஸ்கஷன்' நடக்கும். கவிஞர்கள் அமைத்த பாட்டுக்கு டியூன் போடும் முன், அந்த பாட்டுகள் கருத்தோடு எழுதப்பட்டு இருக்கின்றனவா என்று, முதலில் டி.ஆர்.எஸ்., பரிசீலிப்பார். அதற்கு பிறகுதான், அது மியூசிக் டைரக்டரிடம் போகும். அப்போதெல்லாம் எழுதிக் கொடுத்த பாட்டுகளுக்குத் தான் மெட்டு அமைத்தனர். இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால், கதாசிரியர்கள் இலாகா, வசனகர்த்தாக்கள் இலாகா, கவிஞர்கள் இலாகா என்று, ஒவ்வொரு துறைக்கும் அங்கே ஆட்கள் இருந்தனர். ஒவ்வொருவரும் தங்கள் திறமையைக் காட்ட, தேவைப்பட்ட கதைகளுக்கு வித்தியாசமாக ஏதாவது மாறுதல் செய்ய வேண்டும் எனில், தங்களது கருத்தை எழுதித் தருவர். அவ்வளவு பேருடைய எழுத்துகளும் டி.ஆர்.எஸ்.,சிடம் போகும். அதில் மிகவும் நன்றாக இருக்கிறது என்பதை மட்டும் டி.ஆர்.எஸ்., எடுத்து, உபயோகித்துக் கொள்வார். எல்லாருடைய கருத்துகளையும் ஒன்றாகத் திரட்டிப் படமாக்கியதால், பட டைட்டிலில் கதை, "மாடர்ன் தியேட்டர்ஸ் கதை இலாகா' என்றுதான் வரும். கதை முடிவான பிறகுதான், நடிகர், நடிகையர் தேர்வு நடைபெறும். இதைக்கூட எந்தெந்த பாத்திரத்திற்கு யாரைப் போடலாம் என்று, அவர்கள்

எண்ணத்தைக் கேட்கும் வழக்கம் அவரிடம் இருந்தது. அதனால், நடிகர், நடிகையர் தேர்வு கலந்து ஆலோசிக்கப்பட்ட விஷயமாகத்தான் இருந்தது. பெரும்பாலும் திரை உலகில், அப்போது பிரசித்தி பெற்ற நடிகர், நடிகையர் தான், இங்கே முதலிடத்தைப் பிடிப்பர் என்றால் அதில் வியப்பு இல்லை.

இதற்குப் பின், படத்திற்கு டி.ஆர்.எஸ்., யாரை டைரக்டராக நியமிக்கிறாரோ, அவர்தான் படத்தை டைரக்ட் செய்ய வேண்டும். ஆக, படம் எடுப்பது ஒரு கூட்டு முயற்சி என்கிற கொள்கைகளை முதன்முதலில் உருவாக்கியவர் டி.ஆர்.எஸ்., தான்.

இது முடிந்தவுடன், 'பட்ஜெட்' விஷயம். அதற்கென காரியாலயத்தில் அமர்ந்து, அங்கிருந்த முக்கியஸ்தர்களுடன் ஆலோசனை நடத்தி, இவ்வளவு தான் செலவு செய்ய வேண்டும் என்று வரையறுத்து விடுவார். மாடர்ன் தியேட்டர்ஸ் எனும் கம்பெனியில், ஆரம்ப காலத்தில் சில நடிகர்கள் மாதச் சம்பளத்திற்கு வேலை செய்தனர். இப்போது அந்த பெயர்களை கேட்டால், உங்களுக்கு மிகவும் வியப்பாக இருக்கும். நாடக நடிப்புத் தொழிலில் கொடிகட்டிப் பறந்த காளி.என்.ரத்தினம், டி.ஆர்.எஸ்..க்கு மிகவும் பிடித்த காமெடியன். என்.எஸ்.கே., இங்கே வரும் முன் காளி. என்.ரத்தினம் தான் மாடர்ன் தியேட்டர்ஸ் படங்களில் நடித்து வந்தார்.

அவருடன் இருந்த மிகவும் முக்கியமானவர்தான் டி.எஸ்.துரைராஜ் மற்றும் வி.எம்.ஏழுமலை. பின்னால் வந்து சேர்ந்தவர், ஏ.கருணாநிதி. இவர்கள் எல்லாரும், அப்போது மாத சம்பளத்தில் இருந்தனர். நடிப்பு மட்டும் அவர்களது தொழிலாக இருக்கவில்லை. கதைகளுக்கான சில முக்கிய யோசனைகளையும், டி ஆர் எஸ் ,சிடம் சொல்வர். இப்படிப்பட்ட ஒரு ஜனநாயக முறை, அப்போது இங்கே இருந்தது. "முதலாளி நம்மிடம் யோசனை கேட்கிறார்' என்பதில், இவர்களுக்கும் பரமதிருப்தி. அதனால், கதை நன்றாக இருக்க வேண்டும் என்கிற எண்ணத்தில் அவர்களும் நல்ல யோசனைகள் நல்கி வந்தனர். இதைப் போல், கூட்டு முயற்சியுடன் அவர் டைரக்ட் செய்து வெளியிட்ட படங்கள் எல்லாமே நன்றாக ஓடின. அவற்றின் வெற்றிக்குக் காரணம், டி.ஆர்.எஸ்., என்கிற தனிமனிதரின் அயராத உழைப்பு மட்டுமல்ல. சரியாகத் திட்டமிட்டு எதையும் செய்யும் வாடிக்கை தான். அப்போதெல்லாம் மாடர்ன் தியேட்டர்ஸ் எடுக்கும் படங்களை, இப்போது மாவட்ட வாரியாக விற்றுவிடும் பழக்கம் போல், யாருக்கும் விற்கவில்லை. மாடர்ன் தியேட்டர்சில், 'டிஸ்டிரிபியூஷன்' பகுதி என்று தனியாக இயங்கி வந்தது. அந்த வினியோகத்தைக் கவனித்துக் கொள்ள, ஒரு மானேஜர் இருந்தார். ஐம்பது பேருக்கு மேல் அங்கே, "ரெப்ரசென்டேடிவ்'களாக வேலை செய்து வந்தனர். படத்தின் ரிலீஸ் தேதி குறித்தவுடன், இவர்கள் அவ்வளவு பேரும் பெட்டியுடன் அந்தந்த ஊருக்குப் போய் விடுவர். தினமோ, வாரமோ, இல்லை, மாதமோ பண வசூல் ஒழுங்காக ஆபீசுக்கு வந்து சேரும். இப்படி வேலை செய்யும் பிரதிநிதிகளுக்கு, டி.ஆர்.எஸ்.,சைப் பற்றி நன்றாகத் தெரியும். அதனால், தவறு நடப்பதற்கு அதிக சான்ஸ் இல்லை. சிறு தவறு நடந்தாலும், அந்த நபரின் வேலைக்கு உத்தரவாதம் கிடையாது. அதனால், மாடர்ன் தியேட்டர்ஸ் வளர்ந்தது.

ரிகர்சல் ஹால் வேலையோடு நிறுத்திக் கொள்வதில்லை அவர். மாலை சரியாக, 3:00 மணிக்கு அவர் ஸ்டுடியோவிற்கு வருவார். அவர் வருகிறார் என்றால், அந்தப் பக்கமாக ஈ, காக்காய் கூடப் பறக்காது. அதாவது, அவ்வளவு அமைதி கடைபிடிக்கப்படும் என்பதை

இவ்வாறு குறிப்பிடுகிறேன். இந்த சமயத்தில், ஸ்டுடியோவில் உள்ள அவ்வளவு தொழிலாளர்களும், தங்களுடைய வேலையில் மிகவும் கவனமாக இருப்பர்.
காரை விட்டு இறங்கியதும், முதலில் எதிரே இருக்கும் கார்ப்பெண்டர் செக்ஷனுக்குள் நுழைவார். அதைத் தொடர்ந்து, 'மோல்டிங் பிரிவு' அடுத்தது ஆர்ட் செக்ஷன், பிறகு, காஸ்ட்யூம்ஸ் டிபார்ட்மென்ட். அங்கே நடப்பதைக் கவனித்த பின், மேக்கப் செக்ஷன். வேலை நடந்தாலும், நடக்காவிட்டாலும் சம்பந்தப்பட்ட மேக்கப்மேன் அங்கே இருந்தாக வேண்டும். அடுத்தது லேபரட்டரி, தொடர்ந்து கேமரா, சவுண்ட், ஸ்டில்ஸ், எடிட்டிங், எலக்ட்ரிகல் என்று, எல்லா பகுதிக்கும் சென்று உலா வருவார்.
அவர் கண்களுக்கு மட்டும் எதுவுமே தப்பாது. இந்தத் தொழில் கட்டடங்களை அவர் நேரில் பார்ப்பதற்கு ஒரு முக்கியமான காரணமுண்டு. அந்தப் பகுதியில் வேலை செய்பவர்கள், குற்றங்குறைகளை நேரில் அவரிடம் சொல்லலாம். எழுதியும் தரலாம். எந்தப் பகுதியிலும், எந்தக் குறையும் இருக்கக்கூடாது என்பதில் அவர் மிகுந்த கவனத்தைச் செலுத்தினார். இவ்வளவு பகுதிகளையும் பார்வையிட்ட பின், ஸ்டுடியோ காரியதரிசியின் அறைக்கு வந்து அமர்வார். செகரட்டரி, மானேஜர் ஆகிய இருவரிடமும், அடுத்து படப்பிடிப்புக்கு வேண்டிய செட்டுகள், காஸ்ட்யூம்ஸ் ஆகியவற்றைப் பற்றி பேசி, சம்பந்தப்பட்டவர்களை அங்கே வரவழைப்பார். கதைக்கேற்றபடி, ஆர்ட் டைரக்டர் நான்கு விதமான செட் டிசைன்கள் போட வேண்டும். அதேபோல், காஸ்ட்யூமர் நான்கு விதமான டிசைன்கள் உடைகளுக்காகப் போட வேண்டும். இவற்றில் எது அங்கீகரிக்கப்படுகிறதோ, அவற்றை, பத்து தினங்களில் தயார் செய்து விட வேண்டும். படப்பிடிப்பு நடப்பதற்கு இரண்டு மூன்று தினங்களுக்கு முன், இவையெல்லாம் தயாராக இருக்க வேண்டும். காஸ்ட்யூமர் டிரஸ்களை தயார் செய்தபின், அந்த ஆடைகளை படத்திற்கு, "புக்" செய்யப்படும், நடிகர், நடிகை, வில்லன் ஆகியவர்களை வரவழைத்து, மேக்கப்புடன், அந்த டிரஸ்களைப் போட்டுப் பார்த்து, அதை ஸ்டில் எடுத்து, டி.ஆர்.எஸ்., சிடம் காண்பிக்க வேண்டும். அதில், மாறுதல் ஏதாவது இருந்தால், படப்பிடிப்புக்கு முன் அவை சரி செய்யப்பட்டு விடும். அதற்கு பின்புதான் படப்பிடிப்பு. ஆடை அலங்காரத்தைப் பார்ப்பதோடு அவர் நிறுத்திக் கொள்ள மாட்டார். மேக்கப் டெஸ்ட் செய்து, கதாபாத்திரத்திற்குத் தகுந்தாற் போல், தலையில், 'விக்', முகத்தில் மீசை இவையெல்லாம், ஓ.கே., செய்து விடுவார். அவரோ, இல்லை படத்தை டைரக்ட் செய்யப்போகும் நபரையோ, அருகில் வைத்து தான் இவ்வளவு வேலைகளையும், டி.ஆர்.எஸ்., கவனிப்பார். நடிகர், நடிகையர், இந்த மேக்கப் டெஸ்டுகளுக்கு ஒத்துழைப்பு தருவர். திரையில் தெரியப் போவது அவர்களது முகம்தானே! இவ்வளவு வேலைகளையும் தன் ஒருநாள், 'ஷெட்யூலில்' உள்ளடக்கிக் கொண்டு, தமிழகத்தில் வேலை செய்த முதல் ஸ்டுடியோ முதலாளியும், டைரக்டரும் டி.ஆர்.எஸ்., தான். இதற்கு அப்பால், டி.ஆர்.எஸ்., ஒரு முக்கியமான வேலையை, வெளியுலகத்திற்கே தெரியாமல் செய்து வந்தார். அது என்ன?

## முதலாளி. (3)

மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோ அமைந்திருந்த இடம் சேலம்-ஏற்காடு போகும் பாதையில் இருந்தது. ஸ்டுடியோவை சுற்றிலும், மூன்று கிராமங்கள் இருந்தன. அந்த மூன்று கிராமங்களில் இருந்துதான் டி ஆர் சுந்தரம் தன் ஸ்டுடியோவுக்கு ஆட்களை தேர்ந்தெடுத்தார். அவர்கள் அனைவரும் என்று சொல்லாவிட்டாலும் பெரும்பாலானோர் படிப்பு வாசனை அற்றவர்கள். அவர்கள் வேலையும் செய்ய வேண்டும்; கொஞ்சம் எழுதப் படிக்கவும் தெரிய வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு ஆரம்ப காலத்திலேயே உதித்து விட்டது. இதற்காக அவர் என்ன செய்தார் தெரியுமா? பள்ளிக்கூடம் ஒன்றை ஸ்டுடியோவிற்குள்ளேயே கொண்டு வந்து விட்டார். முதல் வகுப்பிலிருந்து - ஐந்தாவது வகுப்பு வரை பாடங்கள் சொல்லித் தரப்படும். இதற்காக வெளியில் இருந்து ஆசிரியர்கள் வரவழைக்கப்பட்டனர்.



காலை 8:00 மணி முதல், மாலை 5:00 மணி வரை வேலை செய்த தொழிலாளர்களில், படிப்பு வாசனை இல்லாதவர்கள் நேராக வகுப்பிற்குப் போக வேண்டும். ஒரு மணி நேரப் படிப்பிற்குப் பின் தான் அவர்கள் வீட்டிற்குச் செல்ல அனுமதி கிடைக்கும். பள்ளிக்குச் செல்லாமல், எந்த தொழிலாளியும் வெளியே போக அனுமதி கிடையாது! படிக்காதவர்களுக்குத்தான் படிப்பு. ஆனால், மற்ற டெக்னிஷியன்களும் வெளியில், 6:00 மணிக்கு முன் போக முடியாத வண்ணம், அவர்களுக்கும் ஒரு ஏற்பாடு செய்து கொடுத்தார். டென்னிஸ் கோர்ட், பேட்மிண்டன் கோர்ட், வாலிபால் கிரவுண்டு, டென்னிகாய்ட், டேபிள் டென்னிஸ், கேரம் போர்டு, சடுகுடு கிரவுண்டு மற்றும் ரீடிங் ரூம் போன்ற பல வசதிகள் ஸ்டுடியோவிற்குள் இருக்க, எந்தத் தொழிலாளிக்குத்தான் வீட்டிற்குப் போக மனம் வரும்?

ஒரு தந்தை தன் குழந்தைகளை எப்படிக் கவனித்துக் கொள்வாரோ அதைப் போல

ஸ்டுடியோவில் உள்ள தொழிலாளர்களை அவர் கவனித்துக் கொண்டார் அப்போது அங்கே வேலை செய்த தொழிலாளர்கள் 220 பேர்களுக்கு மேல
சில நாட்களில் ஸ்டுடியோவில இருக்கும் மினி தியேட்டரில, ஆங்கிலப படங்களும திரையிடப்படும அதையும் தொழிலாளர்கள பார்க்கலாம மதிய உணவு முடித்து ஸ்டுடியோவிறகுள நுழையும சக தொழிலாளர்களுக்கு சத்துணவாக ஒவ்வொருவருக்கும் இரண்டு மலைவாழைபபழம் கொடுக்கபபடும இவற்றிற்கு அபபால் இன்னொரு வேலையும நடந்தது. ஆர்ட டைரக்டர் பெயின்டர் காஸ்டயூமர் மேக்கபமேன் போன்றோருக்கு தனியாக ஒரு ஆசிரியர் பாடம் எடுத்தார் அவர், டிராயிங் மாஸ்டர் இவர்கள எலலாரும முறைபபடி படம வரைவதில தேர்ச்சி பெறவேண்டும என்று விருமபினார் டி ஆர் சுந்தரம.
ஸ்டுடியோவில் ஷூட்டிங் நடக்கும நாட்களில் எல்லாருக்கும சாபபாடு அஙகேயே பரிமாறபபடும
கதாநாயகிக்கும நாயகனுக்கும் அதே சாப்பாடுதான் அந்த உணவை சாபபிட அவர்களுக்கு விருபபம இலலையெனில வெளியில இருந்து அவர்களுக்குத் தேவையான உணவு வரவழைத்துத் தரபபடும இதற்கு சமபந்தபபட்டவர்கள் தான பணம் தர வேண்டும் இன்னொரு விஷயம் இன்றைக்கு நூறு சாபபாடு என்றால், அவ்வளவு பேருக்குத்தான் உணவு அதிகபபடியாக இரணடொருவர் சாபபிட்டால அவர்கள யார் என்கிற விவரம் டி ஆர் சுந்தரத்தின் கவனத்திறகு போய் விட வேண்டும் ரிகர்சல் ஹாலில சமையல வேலை நடக்கும அங்கிருந்துதான சாபபாடு ஸ்டுடியோவிறகு வேனில் போகும.
டிபன் விஷயத்தில் சற்றே மாறுதலை விரும்பிய ஒருவர், டி ஆர் சுந்தரத்திடம் போயக் கேட்ட சமபவம ஒன்று இங்கே ஞாபகத்திறகு வருகிறது மாலை வேளைகளில் எல்லாருக்கும் மிக்சரும்-காபியோ அல்லது டீயோ வழங்கபபடும் ஒரு கதாசிரியர், இவற்றுடன் ஒரு ஸ்வீட்டும் கொடுத்தால் நன்றாக இருக்குமே என்று நினைத்தார் நிர்வாகியிடம விண்ணபபத்தை சமர்பித்த போது அவர் நேராக டி ஆர் சுந்தரம அறையின பக்கம் கையைக் காட்டி விட்டார் தைரியமாக போனார் கதாசிரியர்
'முதலாளி மாலை வேளையில மிக்சர் - காபி தருகிறீர்களே அதனுடன ஒரு ஸ்வீட்டையும் சேர்த்துக் கொண்டால நனறாக இருக்குமே என்றார் ஒரு வினாடி கூடத் தயங்காமல் முதலாளி பதில் கொடுத்தார்
'நீ கேட்ட ஸ்வீட் தானபபா எனக்கு லாபம ' என்றார்
ஸ்வீட் போட்டால் அதிக செலவு என்பதை, அவர் மிகவும நாசூக்காகச் சொல்லி விட்டார் கதாசிரியர் யார் எனகிறீர்களா? அவர் தான ஸ்டுடியோ முதலாளியாகவும் "இயக்குனர் திலகம என்ற பட்டப பெயரையும பெற்ற கே.எஸ கோபாலகிருஷ்ணன் "குமுதம படத்திற்கு அவர் வசனம எழுத வந்தபோது நடந்த சமபவம இது
ஸ்டுடியோ விஷயத்திற்கே மீண்டும வருவோம அங்கே பணிபுரியும அவ்வளவு முக்கியமான டெக்னிஷியன்களும் நகரில் ரிலீஸ் ஆகும் ஆங்கில இந்தி மற்றும் தமிழபபடங்களைப பார்த்துவிட்டு, தங்களுடைய எண்ணங்களை எழுதி, டி ஆர் சுந்தரம மேஜையின் மீது வைக்க வேண்டும கதைச் சுருக்கத்தோடு அந்த படங்களில இருக்கும சிறந்த அம்சங்களையும குறிபபிட வேண்டும் இந்தப படங்களைப பார்க்க அவர்களுக்கு,

ஏற்படும் டிக்கெட் செலவை ஸ்டுடியோவே ஏற்றுக் கொள்ளும் அவர்கள் கொடுத்த விமர்சனத்தை டி ஆர் சுந்தரம் மிகவும் கவனமாகப் பரிசீலிப்பார் தேவையான கருத்துகளை மட்டும் எடுத்துக் கொள்வார்

இப்படித்தான் டி ஆர் சுந்தரம் தன் ஸ்டுடியோ நிர்வாகத்தை நன்றாக நடத்தி வந்தார் அவரே எல்லாப் படங்களையும் டைரக்ட் செய்தார் செய்ய விரும்பினார் என்று சொல்ல முடியாது பிரபல டைரக்டர்கள் பலர் மாடர்ன் தியேட்டர்சில் வந்து டி ஆர் சுந்தரத்திற்காக பணியாற்றி இருக்கின்றனர் அவர்கள் படத்தை எடுத்து முடிக்கும் வரை இவர் தலையிட்டு இருக்காது முடிவில் இங்கே இப்படிச் செய்யலாம் கொஞ்சம் மாற்றலாம் என்பது போல் யோசனை சொல்வார் அவையும் ஏற்றுக் கொள்ளப்படும்

இரண்டாவது உலக யுத்தம் முடிந்த நேரம் அப்போது உணவுப்பொருட்களும், உடுக்க துணிகளும் கிடைக்காத காலம் அந்த நேரத்தில் டி ஆர் சுந்தரம் பெரும் புரட்சி ஒன்றைச் செய்தார் அரசின் உதவியுடன், எல்லாப் பொருட்களும் நியாய விலைக்கே கிடைக்கும் வகையில் கூட்டுறவு பண்டகசாலை ஒன்றை ஸ்டுடியோவில் நிறுவினார் ஸ்டுடியோ தொழிலாளர்களுக்கு மட்டும் அது மிகவும் உபயோகமாக இருந்தது. தொழிலாளர் நலனில் அக்கறை கொண்டவர் டி ஆர் சுந்தரம் என்பதற்கு இதை விட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

அதனால், நன்றியுடன் இருந்த அத்தொழிலாளர்களின் உதவியினால் அவரால் சிறந்த திரைப்படங்களைக் கொடுக்க முடிந்தது

'மாயா மாயவன் படத்துக்கு பின் டி ஆர் சுந்தரம் தொடர்ந்து படங்கள் எடுத்தார் 'தாயுமானவர்' படத்துக்கு பின் வந்த படம் 'சந்தனத் தேவன்' ஜி எம் பஷீர் கதாநாயகனாக நடித்தது இந்த படத்தின் கதை ராபின்ஹூட் கதையைத் தழுவியது. தொடர்ந்து 'ஆனந்த ஆஸ்ரமம்' கதாநாயகன் வி வி பந்துலு கதாநாயகி ஆர் பி லட்சுமி தேவி இதில், என் எஸ் கிருஷ்ணன் டி ஏ மதுரம் ஆகியோரும் நடித்தனர் இதற்குப் பின் டி ஆர் சுந்தரம் இயக்கிய படம் 'சத்யவாணி' இதில் எம் ஆர் ராதா கே எல் வி வசந்தா ஆகியோர் நடித்தனர்

இந்த படங்களைப் பற்றியெல்லாம் பெரிதாகச் செய்திகள் வெளியிட எந்த பத்திரிகையும் இல்லை சிறு சிறு செய்திகள் மட்டும் அவ்வப்போது சில தினசரிகளில் வந்தன ஆனால் அப்போது செய்திகளை ஒழுங்காக வெளியிட்டுக் கொண்டிருந்த ஒரே பத்திரிகை, "சினிமா உலகம் எனும் வாரபத்திரிகை தான் அந்த பத்திரிகையை பண்டிதர் பி எஸ் செட்டியார் நடத்தி வந்தார் ஏராளமான சினிமாச் செய்திகள் விளம்பரங்கள் மற்றும் சிறுகதைகள் அடங்கிய அந்த பத்திரிகை அந்தக் காலத்தில் மிகவும் பிரபலமானது

கடந்த 1934ல் துவங்கிய இப்பத்திரிகை வாரம் ஒரு முறைதான் வரும் 1940ல் நடந்த இப்பத்திரிகையின் ஆறாவது ஆண்டு விழாவிற்கு டி ஆர் சுந்தரம் அனுப்பிய கடிதம் இதோ

சினிமாக் கலையின் முன்னேற்றத்திற்கென்று சிறந்த தொண்டாற்றி உறங்கிக் கிடந்த கலை உணர்ச்சியாளர்களுக்கு உத்வேகத்தைக் கிளப்பி இன்று அதே துறையில் அரும்பெரும் சேவை செய்து வரும், "சினிமா உலகம் பத்திரிகையின் ஆறாவது வருட ஆரம்ப மலர் வெளிவரப் போவது கேட்டு நான் பெரிதும் மகிழ்வெய்துகிறேன் நிமிடத்திற்கு ஒரு பத்திரிகை தோன்றி, நினைப்பவையெல்லாம் கலை நுணுக்கம் என்று

கருத்தில் தோன்றியவற்றை கட்டுரை என எழுதி தமிழகத்தில் உலவவிட்டு அவைகள் மணிக்கணக்கில் மறைந்து விடுகின்றன. நம் "சினிமா உலகம்" அப்படி இல்லாமல் விஷயம் நிறைந்து நடுநிலைமையோடு நாகரிக முறை தவறாமல் அரிய கட்டுரைகள் பல நிறைந்து தெளிவிய உருவத்தில் சிறிய தாமதமுமின்றி வெளிவந்து மக்களின் அவசியத்தை பூர்த்தி செய்கிறது.
இவ்வளவு பெருமையும் "சினிமா உலகம்" பெறுவதற்குக் காரணஸ்தர் ஆசிரியர் பண்டித பி.எஸ் செட்டியாராவார். அவரது திறமையே பத்திரிகை உருவில் வெளி வருகிறது என்றாலும் மிகையாகாது. கலைத்தொண்டு செய்யும் இப்பத்திரிகை இன்னும் உயர்ந்த மேம்பாடுற்று விளங்க இறைவன் அருள் புரிவாராக.
- இப்படி வாழ்த்து செய்தி அனுப்பியிருந்தார் டி ஆர் சுந்தரம்.

தன் ஸ்டுடியோ செய்திகளை முக்கியத்துவம் கொடுத்து வெளியிடும் பத்திரிகை ஒன்று தேவை என்பதை, அவர் ஸ்டுடியோ ஆரம்ப காலத்திலிருந்தே உணர்ந்தார். 'ராமலிங்க விலாஸ்' எனும் மாளிகைக்கு பின்னால் இருந்த பரந்த இடத்தில் முதலில் ஒரு பெரிய கட்டடத்தை நிறுவி அங்கே ஒரு அச்சகத்தை நிறுவினார். சேலத்தில் அப்போது விரல் விட்டு எண்ணக்கூடிய அச்சகங்கள் தான் இருந்தன. ஸ்டுடியோ, ஆபீஸ் சம்பந்தமான எல்லா வேலைகளுக்கும், இந்த அச்சகத்தை உபயோகித்துக் கொண்டாலும் வெளியார் வேலைகளுக்கும் இந்த அச்சகம் பயன்பட்டது.

வெளியிலிருந்து வரும் நபர்கள் உள்ளே வர வேண்டும் என்றால் வாயிலில் இருக்கும் வாட்ச்மேனிடம் உத்தரவு பெற்று தான் உள்ளே வர வேண்டும். வெளியாட்கள் யாரும் 'சட்' டென்று உள்ளே நுழைந்து விட முடியாது. அந்த அச்சகத்தின் பெயர் 'ஜெகலட்சுமி பவர்பிரஸ்'.

அச்சகம் இருக்கிறது. பத்திரிகையை ஆரம்பித்து விடலாம் என்ற எண்ணத்தைச் செயலாக்க விரும்பிய டி ஆர் சுந்தரம் பத்திரிகை ஆரம்பிக்கும் போதே அதற்கு வேலசாமி கவியைத் தான் ஆசிரியராக நியமித்தார். வேலசாமி கவிக்குப் பின் எஸ் எஸ் சண்முக சுந்தர நாயனார் என்பவரை பத்திரிகை ஆசிரியராக நியமித்தார். பிரபல நாவலாசிரியர் கோ தா சண்முகசுந்தரம் (மேதாவி) கூட இதன் ஆசிரியராக இருந்தார் என்று சொல்லப்படுகிறது. ஆனால் நாயனார்தான் பல வருடங்கள் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டார்.

ஸ்டுடியோ செய்திகள் மட்டுமல்ல. படங்களின் ஸ்டில்கள், கதைச் சுருக்கம், சிறுகதை, அரசியல் என்று அப்பத்திரிகையில் எல்லாமே வரும். அதே சமயத்தில் வெளி நபர்களின் படத் தயாரிப்புச் செய்திகளையும் அப்பத்திரிகை வெளியிட்டது. மாதம் இருமுறை தவறாமல் வெளிவந்து கொண்டிருந்த அப்பத்திரிகையின் பெயர் தான் 'சண்டமாருதம்'. இதைப் போல் ஒரு பெயரை டி ஆர் சுந்தரம் ஒருவரால் தான் வைக்க முடியும். இந்த பத்திரிகை அச்சடிப்பில் எந்தவிதமான தாமதமும் ஏற்படக்கூடாதென்றே டி ஆர் சுந்தரம் 'லிட்டில் ஜெயண்ட்' என்ற ஒரு நவீன அச்சு இயந்திரத்தை அயல் நாட்டிலிருந்து வரவழைத்தார். இதனால் பத்திரிகை வேகமாக அச்சடிக்கப்பட்டது. நவீன வசதிகளுடன்

இருந்த அந்த அச்சகம் சேலத்தில் மிகச் சிறந்த அச்சகம் என்ற பெயர் பெற்று இருந்தது 'சண்ட மாருதம்' பத்திரிகை, சினிமா உலகத்தாரிடையேயும் வாசகர்களிடமும் அமோக வெற்றி பெற்றது. இதில் தான் "ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணி' எனும் திரைப்படத்தின் கதை தொடராக வந்தது. மக்கள் எல்லாரும் விரும்பிப் படித்தனர் பத்திரிகையின் சர்க்குலேஷனும் அதிகமாகியது.

எல்லா பகுதிகளையும் ஒழுங்குபடுத்தி விட்டு, அவர் தயாரிப்பில் முழு கவனம் செலுத்த ஆரம்பித்தார். ஸ்டுடியோவில் இருந்த முக்கிய டெக்னிஷியன்கள் எல்லாரும் எவ்வாறு ஒவ்வொரு துறையையும் சிறப்பாக நடத்தலாம் என்பதற்கான யோசனைகளை சனிக்கிழமைதோறும் ஒன்று கூடி பேசி, எழுதித்தர அது ஸ்டுடியோவின் காரியதரிசியின் கவனத்திற்கு வரும். அவர் அதை முழுமையாக கவனித்து தனியாக எழுதி தன் நோட் புத்தகத்தை டி ஆர் சுந்தரத்திடம் சமர்ப்பிப்பார்.

இதுதான் ஒவ்வொரு வாரமும் நடைமுறையில் இருந்த வழக்கம். கேமரா சவுண்டு என்று ஒவ்வொரு பகுதியும் காலத்திற்கேற்ப விருத்தியடைந்தது. இந்தக் கூட்டு முயற்சியால் தான் மாடர்ன் தியேட்டர்ஸ் படங்களைப் பொறுத்தவரை சவுண்டும் கேமராவும் பேசத் தகுந்த அளவுக்கு அவ்வளவு சிறப்பாக இருக்கும். இதற்கு காரணம் வாரந்தோறும் நடக்கும் அந்த ஆலோசனைக் கூட்டத்தின் விளைவு என்று தான் சொல்ல வேண்டும்.

அப்போது மாடர்ன் தியேட்டர்சின் காரியதரிசியாக இருந்தவர் டி ஆர் சுந்தரத்தின் சகோதரர் கந்தப்ப முதலியாரின் புதல்வர் ஆர் கே சித்தையன் தன் படிப்பை முடித்தவுடன் உதவியாளராக வந்து சேர்ந்து விட்டார். இவரது மூத்த சகோதரர்தான் ஆர் கே பாலு ஏறக்குறைய அவருக்கும் டி ஆர் சுந்தரம் வயதுதான் இருக்கும். அவர் தனக்கென்று ஒரு படக்கம்பெனியை துவங்கி, அதற்கு "பரிமளா பிக்சர்ஸ்" எனப் பெயரிட்டு மாடர்ன் தியேட்டர்சுடன் கூட்டுச் சேர்ந்து படங்கள் எடுத்தார். அவற்றில் முக்கியமானவை விக்ரம ஊர்வசி, ஹரிஹரமாயா, சிவலிங்க சாட்சி ஆகியவை.

## முதலாளி. (4)

எந்த காரணத்தினாலோ பாலு முதலியார் தன சகோதரனுடன ஐக்கியமாகி விட்டார்
'சிவலிங்க சாட்சி' படத்தில தந்திரக் காட்சிகள் நிறைந்து இருந்தன அதற்கு
பொறுப்பானவர் பேயஸ் எனும ஜெர்மன் கேமராமேன் அதற்கு பின மாடர்ன
தியேட்டர்ஸ் டிஸ்டிரிபியூஷன் காரியாலயப் பொறுப்பை முழுமையாக ஏற்றுக்
கொண்டார் பாலு முதலியார்



கூட்டுத் தயாரிப்பான
'விக்ரம ஊர்வசி' படம்
முடிந்தவுடன்,
டி ஆர் சுந்தரம் பெரிதாக ஒரு
திட்டம் போட்டார்
அவருக்கு ஆங்கிலக்
கதைகளின் மீது அலாதி
மோகம் ஆரம்ப
காலத்திலிருந்தே இருந்தது
அதன விளைவு தான்
'உத்தமபுத்திரன்' படம்
எடுக்க காரணமானது
அலெக்சாண்டர் டூமாஸ் எனும் ஆங்கில எழுத்தாளரின கதைதான் 'மேன இன் தி அயர்ன்
மாஸ்க்' என்பதாகும் படிப்பதற்கு மிகுந்த சுவையுள்ள நாவல்
இந்த கதையை திரைபடமாக்க முடிவெடுத்த டி ஆர் சுந்தரம வசனத்தை டி வி.சாரி
எனும் பெரிய எழுத்தாளரை விட்டு எழுத வைத்தார்
'ஒரு உறையில இரண்டு வாள' இருக்க முடியாது போன்ற கூர்மையான வசனங்களுக்கு
அவர்தான் சொந்தக்காரர்
கதாநாயகனாக பி யூ சின்னப்பா கதாநாயகி எம வி ராஜமமா வில்லன் டி எஸ் பாலையா
மற்றும என எஸ கிருஷணன டி ஏ மதுரம போனறவர்கள் நடித்தனர் இதில, இரட்டை
வேடத்தை மிகத் திறமையாக ஒளிப்பதிவு செய்தவர், போடோ கூச்வாக்கர் எனும்
ஜெர்மன கேமராமேன முதன் முதலாக இரட்டை வேடத்தைத் திரையில
அறிமுகப்படுத்திய பெருமை, டி ஆர் சுந்தரத்தையே சாரும் நடித்த பெருமை
பி.யூ.சின்னப்பாவிற்கு
தமிழில இப்படிப்பட்ட ஒரு படம வந்ததில்லை எனும அளவுக்கு அப்படம
பாராட்டப்பட்டது, நன்றாகவும் ஓடியது 1941ல் வெளிவந்த இந்த படத்திற்குப் பின் அதே
வருடத்தில. மாடர்ன தியேட்டர்ஸ் பி.யூ சின்னப்பா நடித்த இரு படங்களைத் தயாரித்தது
'தர்மவீரன' 'தடாளன' எனும அந்த படங்களுக்கு பிறகு யூ.ஆர் ஜீவரத்தினம நடித்த 'பக்த
கவுரி' படம் வெளிவந்து மிகவும நன்றாக ஓடியது "1001 இரவு' எனும அராபியக் கதைத்
தொகுப்பில இருந்து ஒரு கதையைத் தேர்ந்தெடுத்து அதற்கு 'மாயாஜோதி' எனப

பெயரிட்டார் "அலாவுதீனும் அற்புத விளக்கும் எனும் கதைதான் அது. இதில் டி ஆர் மகாலிங்கம் நடித்தார். 1942ல் வெளியான படம் அது. அதைத் தொடர்ந்து வந்தது தான், 'சதி சுகன்யா' இதில் டி ஆர் ராஜகுமாரி நடித்தார்.

மாடர்ன் தியேட்டர்சின் "ஏ" ப்ளோர்ஸ் ஆசிரம செட் மிகவும் அலங்காரமாகப் போடப்பட்டு இருந்தது. படப்பிடிப்பு தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு இருக்கும்போது மின்சார கசிவால் செட் முழுமையாக எரிந்து போயிற்று. மனம் தளர்ந்து விடாமல் டி ஆர் சுந்தரம் புதிதாக இன்னொரு "செட்"டை நிர்மாணித்து படத்தை எடுத்து முடித்தார். படம் வெளிவந்து நன்றாக ஓடியது.

தீப்பிடித்த விஷயத்தைச் சொல்லும்போது இன்னொரு படத்தைப் பற்றியும் அவசியம் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

அந்த சம்பவம் நடந்தது 1948ம் ஆண்டில் 'போஜன்' என்றொரு படம் பி.எஸ் கோவிந்தன் எஸ் வரலட்சுமி நடித்தது. இது ஒரு கூட்டுத் தயாரிப்பு. அந்தப் படம் முடிந்துவிட்ட நிலையில் ரிலீஸ் தேதியும் குறித்தாகி விட்டது. படம் தயாரிக்க மட்டும் நான்கு மாதங்கள் ஆயின. எடிட்டிங் ரீ-ரிகார்டிங் எல்லாமே முடிந்து விட்டது. அந்த சமயத்திலதான் மின்சாரக் கோளாறினால் படம் பூராவும் எரிந்து விட்டது. சாம்பலாகிப் போனது. குறித்து கொஞ்சம் வருத்தப்பட்டார் டி ஆர் சுந்தரம். பிறகு விரைவில் சுதாரித்து, ஒரே மாதத்தில் அதே நடிகர் நடிகையரை வைத்து மறுபடியும் படத்தை எடுத்து முடித்து குறித்த நாளில் ரிலீசும் செய்தார். படம் நன்றாகப் போனது.

மாடர்ன் தியேட்டர்சில் வருடா வருடம் மிகவும் சிறப்பாக நடத்தப்படும் ஒரு திருவிழாவைப் பற்றி இங்கே அவசியம் சொல்ல வேண்டும். திருவிழா என்பதை விட, தொழிலாளர் விழா என்று சொன்னால் மிகவும் பொருத்தமாக இருக்கும். அதுதான் அங்கே நடக்கும் "ஆயுத பூஜை" விழா. ஆயுத பூஜை விழா வருகிறது என்றாலே ஸ்டுடியோ இந்த விழாக்களுக்காக விழாக்கோலம் பூண்டு விடும். சரஸ்வதி பூஜை ஆயுத பூஜை விஜயதசமி என்று இந்த மூன்று நாட்களும் அங்கே சிறப்பாகக் கொண்டாடப்படும். அப்போது நடக்கும் படப்பிடிப்பின் கதாநாயகன் நாயகி வில்லன் காமெடியன் மற்றும் டெக்னீஷியன்ஸ் இதர தொழிலாளர்கள் என்று எல்லாருமே ஒன்று கூடுவர். இவர்கள் அல்லாது கம்பெனிக்கு சம்பந்தப்பட்ட வழக்கறிஞர்கள் ஆடிட்டர்கள் டிஸ்டிரிபியூட்டர்கள் மற்றும் அவர்களது குடும்பத்தினர் அனைவரும் "ஆயுத பூஜை அழைப்பிதழைப் பெற்று ஸ்டுடியோவுக்கு வருவர்.

என்னென்ன நிகழ்ச்சிகள் நடக்கும் என்பது, பத்து நாட்களுக்கு முன்பே திட்டமிடப்பட்டு விடும். மாறுவேடப்போட்டி டிராமா, ரன்னிங் ரேஸ் சடுகுடு, வாலிபால், பேட்மிண்டன், டென்னிஸ் கேரம்போர்டு பிங்பாங்க் டக் அப்வார் சிலம்பு விளையாட்டு இப்படி பலவிதமான விளையாட்டுகள் அந்த மூன்று நாட்களும் நடைபெறும். இதில் குறிப்பிட்ட சிலவற்றை தவிர மற்றதில் யார் வேண்டுமானாலும் கலந்து கொண்டு பரிசுகளைப் பெறலாம். வரும் எல்லாருக்கும், மூன்று வேளையும் உணவு பரிமாறப்படும். தொழிலாளர்களுடன் முதலாளியும் நீண்ட மேஜையில் அமர்ந்து சாப்பிடுவதுதான் இதன் முக்கிய அம்சம். போட்டியில் ஜெயிப்பவர்கள், அவர்கள் எதிர்பார்க்காத வகையில் பெரும் பரிசுகளைப் பெறுவர்.

இந்த கோலாகலத்திற்காக மக்கள் ஒவ்வொரு ஆண்டும் ஏங்கிக் கொண்டு இருப்பர். இதை

போல் மூன்று நாள் திருவிழா வேறு ஸ்டுடியோக்களிலும் நடந்ததாகத் தெரியவில்லை
பல படங்களைத் தொடர்ச்சியாகத் தயாரித்த பின, ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான 'மனோன்மணிய'த்தை படமாக்க விரும்பினார் டி ஆர் சுந்தரம்

அப்போதைய நட்சத்திர பட்டாளமே அந்த படத்தில நடித்தது பி யூ சின்னப்பா டி ஆர் ராஜகுமாரி ஆர் பாலசுப்ரமணியன டி ஆர் மகாலிங்கம கே கே பெருமாள என் எஸ் கிருஷ்ணன் டி ஏ மதுரம் ஆகியோர் நடித்தனர் கதைக்கு பெயர் கொடுக்க வேண்டுமென்றால அதில குறிப்பிட்டுள்ள பல காட்சிகளை நிதர்சனமாக மக்களின கண்களில் காட்ட வேண்டும் சேர அரசனுக்கும் பாண்டிய மன்னனுக்கும நடந்த போரில் குறைந்தது, 1500 வீரர்களாவது தேவை அதாவது ஒரு நாட்டிற்கு 750 பேராக 1500 துணை நடிகர்கள தேவை நாள் சம்பளம மூன்று அணா அவர்களுக்கு மதியம சாப்பாடும தர வேண்டும நகரிலிருந்து இவ்வளவு பேரையும ஷூட்டிங் நடக்கும இடத்திற்கு அழைத்துச் செலல வாகன வசதி இருக்கவிலலை எலலாரும நடந்துதான வர வேண்டும
ஏற்காடு அடிவாரத்தில் போர்க்களம அங்குதான் தொடர்ந்து படப்பிடிப்பு இவர்களைத் தவிர ஸ்டண்ட நடிகர்கள் ஹீரோ ஹீரோயின விலலன படப்பிடிப்புக்குத் தேவையான டெக்னீஷியனகள எல்லாருமாகச் சேர்ந்து 2 000 பேர்களுக்கு மேல ஓர் இடத்தில கூட்டப்படுவர் இவர்களுக்குத் தேவையான சாம்பார் சாதம் தயிர் சாதம், பெரிய பெரிய அண்டாக்களில நிரப்பப்பட்டு மாட்டு வண்டிகளில கொண்டு வரப்படும இவர்களுக்குப பரிமாற நூறு பேர் இருப்பர் தண்ணீர் கொடுக்க ஐம்பது பேர் என்று ஒரு திருவிழாக் கூட்டமே அங்கே இருக்கும டைரக்டர் டி ஆர் சுந்தரம உட்பட எலலாருக்குமே இந்தக் கலவை சாதம் தான வித்தியாசமே கிடையாது ஆறு கேமராக்கள் வேலை செய்ய படப்பிடிப்பு பத்து நாட்கள் நடந்தன இதர செலவுகளைப பற்றி இங்கே குறிப்பிடவில்லை
அதனால 'மனோன்மணி பட விளம்பரத்தில ஏராளமான பொருட செலவில தயாரிக்கப்பட்ட பிரமாண்டமான படம் என்று விளம்பரம் செய்யப்பட்டது உண்மையும் அதுதானே!
அதற்கு பின் எத்தனையோ பிரமாண்டமான படங்கள வந்து இருக்கலாம ஆனால மனோன்மணிக்கு முன்பு அவ்வளவு பொருட்செலவில் எந்த படமும தயாரிக்கப்படவே இலலை "மனோனமணி பின மாபெரும் வெற்றிக்குப் பின டி ஆர் சுந்தரம தொடர்ந்து படங்களைத் தயாரித்தார் காமெடியனாகவே நடித்த டி ஆர் ராமச்சந்திரனை முதலில் ஹீரோவாக்கி புரட்சிகரமாக ஒரு படத்தைத் தயாரித்தார் எலக்ஷன 'திலது முலது கள் அப்போதே அப்படத்தில காட்டப்பட்டன படத்தின பெயர் "திவான பகதூர்!
அடுத்து வந்தது 'பக்த ஹனுமான் வி ஏ செல்லப்பா நடிக்க, சி வி ராமன் டைரக்ட் செய்தார்
தமிழே தெரியாத எம எல டாண்டன டைரக்ட செய்த படம தான் 'ராஜராஜேஸ்வரி" வசன கர்த்தாவின் உதவியால் இது சாத்தியமானது கதாநாயகி கே எல் வி வசந்தா



18

## முதலாளி. (5)

எல்லா தயாரிப்பாளர்களும் ஆங்கில சர்க்காரை ஆதரித்து ஒரு யுத்தப்படம் எடுக்க வேண்டும் என்று சர்க்கார் ஆணையிட்டது. படம் 11,000 அடிக்கு மேல் எடுக்கப்படக் கூடாது. படம் முழுக்க முழுக்க, யுத்தப் பிரசாரப்படமாக இருக்க வேண்டும்



டி.ஆர் சுந்தரம் தன் பங்குக்கு உடனே ஏதாவது செய்ய வேண்டும் என்று யோசித்து கதை இலாகாவுடன் கலந்தாலோசித்து. ஒரு நல்ல கதையை உருவாக்கினார். அந்த கதை தான் 'பர்மா ராணி'! அப்போது பர்மாவை ஆக்கிரமித்து இருந்த ஜப்பான் ராணுவத்தை எதிர்த்து பிரிட்டிஷ் அரசாங்கம் போராடுவதாகக் கதையமைப்பு கொண்டது. அதிலும், ஒரு புரட்சியைக் காட்ட விரும்பிய டி ஆர் சுந்தரம் தானே ஜப்பானிய ராணுவ தளபதியாக நடித்தார். ஜப்பானகாரனாக காளி என் ரத்தினம் கதாநாயகன் ஹொன்னப்பபாகவதர் கதாநாயகி வசந்தா மற்றும் டி எஸ் பாலையா என் எஸ் கிருஷ்ணன் டி ஏ மதுரம் ஆகியோரும் நடித்தனர்

இந்திய விமானப்படையின் வீர சாகசங்களை மிகவும் தத்ரூபமாக படமாக்கி இருந்தார் டைரக்டர் டி.ஆர் சுந்தரம் "பர்மா ராணி"யை வெளியிட்ட சமயத்தில் டைரக்டர் கே சுப்ரமணியம் "மானசமரட்சணம் எனும் படத்தையும் ஜெமினி வாசன் "கண்ணம்மா என் காதலி எனும் படத்தையும் ஜூபிடர், "என் மகள் எனும் படத்தையும் யுத்தப் படங்களாக வெளியிட்டனர். டி ஆர் சுந்தரம் 'பர்மா ராணி' முதல் காட்சி முடிந்த போது சென்சார் போர்டில் இடம் பெற்று இருந்த ஆங்கில யுத்த பிரச்சார இயக்குனர், ஜி டி பி ஹார்வே என்பவர் படத்தை மிகவும் பாராட்டினார் "பர்மா ராணி" தான் யுத்தப் படங்களில் மிகவும் சிறந்தது என்று தேர்ந்தெடுத்து பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முத்திரை பதித்த 'வீரவாள்' ஒன்றையும் டி ஆர் சுந்தரத்திற்கு பரிசளித்தார். அவர் நேரில் வந்து பரிசளித்த விழாவை. சேலம் மாடர்ன் தியேட்டர்சில் மிகவும் பெரிய அளவில் கொண்டாடினார் டி ஆர் சுந்தரம்

தான் எடுத்த படம் மிகச் சிறந்தது என்று அயல்நாட்டார் ஒருவர் புகழ்கிறார் என்றால், எந்த தயாரிப்பாளருக்குத்தான் அது மகிழ்ச்சியை அளிக்காது'

'பர்மா ராணி' படத்திற்குப் பின் "சுபத்திரா எனும் புராணக் கதையும், "சித்ரா எனும்

சமூகக்கதையும் தயாராயின "சித்ரா"வை டைரக்ட் செய்தவர் வகாட காஷ்மீரி எனும் வடமாநிலத்தவர் கதாநாயகனாக வில்லன் நடிகர் டி எஸ் பாலையா

அடுத்து வந்த "ஆரவல்லி" படத்தை டைரக்டர் சி வி ராமனும் 'துளசிதாஸ்' எனும் தெலுங்கு படத்தை ஒரு தெலுங்கு டைரக்டரும் டைரக்ட் செய்தனர் எஸ் வி ரங்காராவ் அஞ்சலிதேவி இருவரும் நடித்த 'வந்தினி' எனும் தெலுங்கு படம் அடுத்து வெளிவந்தது எஸ் வி ரங்காராவ் மற்றும் அஞ்சலிதேவி இந்த படத்தின் மூலம் தான் அறிமுகமாயினர் கடந்த 1964ல் அடுத்து வந்த படம் தான் "சுலோசனா" எனும் புராணபடம் இதில் கே எல் வி வசந்தா கதாநாயகியாகவும் இந்திரஜித்தாக பி யூ சின்னப்பாவும் நடிக்க ஏற்பாடு ஆகியிருந்தது படத்தின் பூஜை மிகவும் நன்றாகவே நடந்தது படப்பிடிப்பிற்கும் நாள் குறித்தாகி விட்டது முதல் நாள் படப்பிடிப்பு ஆரம்பம் கதாநாயகன் பி யூ சின்னப்பாவிடமிருந்து தகவலே இல்லை செட்டில் எல்லாரும் காத்துக் கொண்டிருந்தனர் வழக்கமான நேரத்தில் படப்பிடிப்பை ஆரம்பித்து விடும் பழக்கம் கொண்ட டி ஆர் சுந்தரம் கதாநாயகன் வரவில்லையே என்று படப்பிடிப்பை கேன்சல் செய்யவே இல்லை திடீரென படப்பிடிப்பு தளத்திலிருந்து அவர் வெளியேறி விட்டார் செட்டில் காத்திருந்த அத்தனை டெக்னிஷியன்களும் அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்து நிற்க, அவர்களை வியப்பில் ஆழ்த்தி விட்டார் டி ஆர் சுந்தரம் "இந்திரஜி"த்தின் மேக்கப்புடன் படப்பிடிப்புக் களத்தில் நுழைந்து விட்டார் தன் ஸ்டுடியோவை பொறுத்த வரையும் யாரையும் நம்பி எதுவும் இருக்கவில்லை என்று அவர் இதன் மூலம் நிருபித்தார் படத்திற்கு பாரதிதாசன் வசனம் என்பது செய்தி அதை டி ஆர் சுந்தரம் எப்படி பேசினார் என்பது தான் வியப்பு

படம் முழுவதுமாக எடுக்கப்பட்டு நன்றாகவே ஓடியது. தான் போகாவிட்டால், படமே நின்று விடும் என்று நினைத்த கதாநாயகன் ஏமாந்து போனதுதான் உண்மை இந்த ஸ்டுடியோவினால் வளர்க்கப்பட்ட ஒரு நடிகர் என்ன குறையிருந்தாலும் முதலாளியிடம் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர படப்பிடிப்பை நிறுத்த முயற்சிக்கக் கூடாது என்பது அப்போதைய நடுநிலைமையாளர்களின் எண்ணம் டைரக்டர் பத்மநாபன் இயக்கிய 'சகடயோகம்' மங்கம்மா சபதம் புகழ் ஆச்சார்யா இயக்கிய 'கடகம்' பிறகு "சண்பகவல்லி" தொடர்ந்து லட்சுமி விஜயம் போன்ற படங்களுக்குப் பின் வந்தது மாடர்ன் தியேட்டர்சின் வசூலில் சாதனை படைத்த 'ஆயிரம் தலைவாங்கிய அபூர்வ சிந்தாமணி' அந்த பெரிய கதையை அதிகமாகச் சுருக்காமல் எடுத்ததால் படத்தின் நீளம் மிகவும் அதிகமாகி விட்டது.

ஏறக்குறைய நான்கு மணி நேரம் ஓடிற்று என்கின்றனர் இந்தப் படத்தின் கதாநாயகியாக நடித்தவர் வி என் ஜானகி பின்னாளில் புரட்சி நடிகரை மணந்தவர் தமிழக முதன் மந்திரியாகவும் சில நாட்கள் இருந்தவர் மாடர்ன் தியேட்டர்சில் வசன கர்த்தாவாகப் பணியாற்றிய கருணாநிதியும் எம் ஜி ஆரும் பின்னாளில் தமிழகத்தை ஆளப

போகின்றனர் என்று அப்போது யாருக்குத் தெரியும்

புலிக்குட்டி பி எஸ் கோவிந்தன், காளி என் ரத்தினம் டி எஸ் துரைராஜ் வி.எம் ஏழுமலை எஸ் வரலட்சுமி சி டி ராஜகாந்தம் குருவாக எம் ஆர் சுவாமிநாதன் எம் ஜி.சக்ரபாணி, ஆர் பாலசுப்ரமணியம் போன்ற பெரியதொரு நடிகர் பட்டாளத்தையே வைத்து படத்தை மிகவும் சுவைபட இயக்கினார் டி ஆர் சுந்தரம் படம் மாபெரும் வெற்றியைப் பெற்றது என்பதை முன்பே குறிப்பிட்டு இருக்கிறேன்

இந்த படத்தின் சென்னை விநியோகத்தை அப்போது வாங்கியவர் முருகேசன் என்பவர் இந்த படத்திற்குப் பின்னால் அவருக்கு 'சிந்தாமணி முருகேசன் என்ற பெயர் வழங்கலாயிற்று இவர் மீது டி ஆர் சுந்தரத்திற்கு மிகுந்த பற்று இருந்தது என்பதற்கு ஒரு உதாரணத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்

முருகேசன், தீ விபத்தொன்றில் சிக்கி படுகாயமடைந்தார் உடல் முழுவதும் தீக்காயம், வாழை இலையில் தான் அவரை படுக்க வைத்தனர் என்று கேள்வி. அப்போது திருமணமாகாத முருகேசனை கவனித்துக் கொள்ள சரியான நபர் இல்லாத காரணத்தினால் டி ஆர் சுந்தரம் தம் சொந்த உதவியாளரான கிருஷ்ணனை சென்னைக்கு அனுப்பி முருகேசனை மருத்துவமனையில் இருந்து கவனித்துக் கொள்ளச் சொன்னார் அபூர்வ சிந்தாமணி சம்பந்தமாக எழுத வேண்டி இருந்ததால் இந்த சம்பவத்தை ஞாபகப்படுத்தினேன் டி ஆர் சுந்தரம் செய்வது சிறு சிறு உதவிகள் என்றாலும் அவை. காலத்தால் மறக்க முடியாதவை. அதாவது அந்த உதவியைப் பெற்றவர்கள் சொல்ல வேண்டும் என்றால் சொல்லிக் கொண்டே போகலாம் அதற்கு இப்போது இங்கே இடமில்லை பின்னால் வருகிறேன்

அடுத்தபடியாக வந்தது "மாரியம்மன்' படம் அதைத் தொடர்ந்து மீண்டும் ஒரு மலையாளப் படத்தை கேரள மக்களுக்காக எடுத்தார் படத்தின் பெயர் "நிர்மலா இந்த இடத்தில் ஒரு பெரிய உண்மையைச் சொல்ல வேண்டும் மலையாளம் தெரியாமல் கன்னடம் தெரியாமல் எப்படி டி ஆர் சுந்தரம் இந்த படங்களை எல்லாம், அந்த காலத்திலேயே எடுத்தார் என்ற கேள்வி எழத்தான் செய்யும்

தனக்கு உதவி செய்ய, உதவி டைரக்டர்களாக, அவர் கேரளாவை சேர்ந்த ஒரு நபரையும், கன்னடத்துக்காரர் ஒருவரையும் நியமித்துக் கொண்டார் 'செம்மீன' படத்தை, உலகத் தரத்திற்கு எடுத்தவரான ராமு காரியட் மலையாளப் படங்களுக்கு உதவியாளராக, டி ஆர் சுந்தரத்திடம் பணிபுரிந்தார் என்றால் உங்களால் நம்ப முடிடமா?

மறைந்த பிரபல நடிகர் முரளியை உங்களுக்குத் தெரிந்திருக்கும் அவர் தந்தை சித்தலிங்கையா கன்னடப் பட உலகில் ஒரு பிரபல டைரக்டர் அவரது வாழ்க்கையும் டி ஆர் சுந்தரத்தின் உதவியாளராகத் தான் துவங்கியது.

## முதலாளி. (6)

செம்மீன் புகழ் ராமு காரியட் மற்றும் கன்னட டைரக்டர் சித்தலிங்கையா ஆகியோரின் சீரிய துணையோடு தான் டி ஆர் சுந்தரம் மலையாள மற்றும் கன்னட படங்களைத் தயாரித்தார் அடுத்தபடியாக டைரக்டரின் கவனம் இலக்கியங்களின் பக்கம் திரும்பியது. பாரதிதாசன் எழுதிய 'எதிர்பாராத முத்தம் எனும் காதல் ஓவியத்தை படமாக்க முடிவு செய்தார் இதற்கு டைரக்டராக தமிழைச் சரிவர அறியாத எல்லிஸ் ஆர் டங்கனும் அவருக்கு உதவியாளராக கே.சோமுவும் நியமிக்கப்பட்டனர்



கலைஞர் அங்கே மாத சம்பளத்தில் வசனம் எழுத நியமிக்கப்பட்டார் 'குண்டலகேசி' என்ற காவியத்தைத் தழுவி அவர் எழுதியிருந்த நாடகம்தான் 'மந்திரிகுமாரி! 'மந்திரிகுமாரி' எனும் நாடகத்தை படமாக்க டி ஆர் சுந்தரம் முடிவு செய்து விட்டார் டைரக்டர் எல்லிஸ் ஆர் டங்கன் வசனகர்த்தா மு கருணாநிதி சினிமா உலகின் சரித்திரத்திலேயே முதன்முதலாக போஸ்டரில் "கதை வசனம் மு கருணாநிதி என்று விளம்பரப்படுத்தியதே 'மந்திரிகுமாரி படத்தில் தான்

கருணாநிதி மாடர்ன் தியேட்டர்சுக்குள் வசனகர்த்தாவாக நுழைந்தவுடன் அங்கே எழுத்துப் புரட்சி நடைபெற்றது என்று தான் சொல்ல வேண்டும் 'மந்திரிகுமாரி' படத்திற்கு யாரை கதாநாயகனாகப் போடுவது எனும் சர்ச்சை திடீரெனத் தலையைத் தூக்கியது. அந்த சமயத்தில் எம் ஜி ஆர் ஜூபிடர் பிக்சர்ஸ் தயாரித்த படங்களில் நடித்து வந்தார் அதே சமயத்தில் கருணாநிதியின் கைவண்ணத்தில் உருவான 'மருதநாட்டு இளவரசி எனும் படத்திலும் அவர் நடித்திருந்தார் அந்த படத்தை எழுதி முடித்த பின் தான் கருணாநிதி சேலம் வந்தார்

டைரக்டர் எல்லிஸ் ஆர் டங்கனுக்கு எம் ஜி ஆரின் தாடையிலிருந்த சிறுகுழி கண்ணை உறுத்தியது அதனால், அவர் கதாநாயகனாக நடிக்க வேண்டாம் என்றார் கருணாநிதியோ, எம் ஜி.ஆர் நடித்தால் தான் நன்றாக இருக்கும் என்று சொல்லிவிட்டார் இரண்டு பேரையும் சமாதானப்படுத்த தாடையில் சிறிய தாடி ஒட்டப்பட்டது டங்கன் சமாதானமடைந்தார் எம் ஜி ஆர் கருணாநிதியின் விருப்பப்படி கதாநாயகன் ஆனார் கருணாநிதி மாடர்ன் தியேட்டர்சில் பெற்ற முதல் வெற்றி அது.
கருணாநிதி வீட்டில் அமர்ந்தும் ரிகர்சலில் அமர்ந்தும் தொடர்ந்து வசனங்கள் எழுதத் துவங்கினார் அவரது வசனங்களை இடையில் ஒரு நபர் வாங்கி அதில் சில திருத்தங்கள் செய்து பின்னால் டி ஆர் சுந்தரத்திற்கு அனுப்பும் வழக்கத்தை மேற்கொண்டு இருந்தார்

தன் வசனத்தில் இன்னொருவர் கை வைப்பதா? மாறுதல் வேண்டின் டைரக்டர் தானே சொல்ல வேண்டும் அதனால் டி ஆர் சுந்தரத்திடம் இதைப்பற்றிச் சொல்லி, குறைப்பட்டுக் கொண்டார் கருணாநிதி அப்போதே டைரக்டர் உத்தரவு போட்டு விட்டார் கருணாநிதி எழுதும் வசனம், நேராகத் தன் மேஜைக்கு வர வேண்டும் என்று இது எழுத்தாளராக அவருக்கு கிடைத்த இரண்டாவது வெற்றி கருணாநிதி வசனங்களை எழுதுவதோடு நிற்காமல் நடிப்பைப் பற்றியும் கேமராக் கோணங்களைப் பற்றியும் மார்ஜின் பகுதியில் குறித்து வைப்பார் இதை டி ஆர் சுந்தரம் மிகவும் பாராட்டினார்

கருணாநிதியின் வசனங்களில் திருத்தம் செய்ய முயன்ற அந்த நண்பர் கோ தா சண்முகசுந்தரம் 'மேதாவி' எனும் புனைபெயரில் பல நவீனங்கள் எழுதியவர் சண்டமாருதம் பத்திரிகையில் சிலநாட்கள் உதவி ஆசிரியராக இருந்தவர் கருணாநிதிக்கு முன்பே மாடர்ன் தியேட்டர்சுக்குள் வந்து விட்ட கண்ணதாசன், சில நாட்களில் சண்டமாருதம் பத்திரிகை ஆசிரியராகப் பணியாற்ற அனுப்பப்பட்டார் அப்போது ஆசிரியராக இருந்த 'மேதாவி' இங்கே கதை இலாகாவில் பணியாற்ற வந்துவிட்டார் அப்போது நடந்த சிறு பிரச்னை இது.

'மந்திரிகுமாரி' படப்பிடிப்பு மிக வேகமாக நடந்தது அப்போதெல்லாம். கருணாநிதியும் படப்பிடிப்பு நடக்கும் இடத்திற்கும் சென்றார் டைரக்டரின் அனுமதியுடன், சில நேரங்களில் வசனங்களை புதிதாகச் சேர்க்க வேண்டியோ, குறைக்க வேண்டியோ இருக்கும் அதை கதாசிரியரே செய்யட்டும் என்று டைரக்டர் அபிப்பிராயப்பட்டார் மாடர்ன் தியேட்டர்சுக்கு இதெல்லாம் புதிய பழக்கம் இதை ஏற்படுத்தியவர் கருணாநிதி வசனகர்த்தா தான் ஒரு படத்தின் ஜீவநாடி என்பதை புரிய வைத்தவர் வசனத்தை ஏற்ற இறக்கத்தோடு பேசும்போது நடிப்பு தானாக வந்துவிடும் என்ற எண்ணத்தை, டி ஆர் சுந்தரம் மனதில் கருணாநிதி பதிய வைத்தார் என்றால் அது உண்மை

'மந்திரிகுமாரி'யின் மூலம் பிரபலமான கதாநாயக அந்தஸ்துக்கு உயர்ந்தது எம ஜி ஆர் மட்டுமல்ல வில்லனாக நடித்த எம என நம்பியாரும் தான். ஏற்கனவே கதாநாயக அந்தஸ்தைப் பெற்று இருந்த எம ஜி. ஆர் மிகவும் பிரபலமாகப் பேசப்பட்டது 'மந்திரிகுமாரி'யின் மூலம்தான் நம்பியாரும் அவ்வாறே தலையை மொட்டை அடித்தும், அவர் ராஜகுருவாக நடித்ததையும் எப்படி மறக்க முடியும்? ஆக. மந்திரிகுமாரி மூலம் பலர், பிரபலமடைந்தனர் என்றால் அதை யாராலும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது

ரிலீஸ் செய்யப்பட்ட தேதியிலிருந்து அந்தப்படம் வசூலில் சாதனை படைத்தது எனலாம் இந்தப் படத்தின் பல பகுதிகள் எடுக்கப்படாமல் இருக்கும் போதே எல்லீஸ் ஆர் டங்கன் ஏதோ அவசர வேலையின் காரணமாக அயல்நாடு சென்றுவிட பாக்கி எல்லா வேலைகளையும் டி.ஆர்.சுந்தரம் தான் செய்தார் படம் சென்சாருக்குப் போன போது சிறு பிரச்னைகள் தலைதூக்கின அதையும் மிகவும் நன்றாக ஒழுங்குபடுத்தி படத்தை ரிலீஸ் செய்தார் டி.ஆர் சுந்தரம்

'மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோவில் டைரக்டர் டி ஆர்.சுந்தரம் படம் எடுத்தார்' என்று ஒரே வரியில் சொல்லி விடலாம் ஆனால் அவர் எடுத்த படங்களின் பின்னால் உள்ள சில முக்கியமான அதே சமயம் மிகவும் அவசியமான விஷயங்களை இங்கே குறிப்பிட வேண்டியது மிகவும் அவசியமாகிறது டி ஆர் சுந்தரம் மறைந்த நடிகர் பி.யூ சின்னப்பாவுக்கு புதுவாழ்வு கொடுத்தார் என்றால் உங்களால் நம்ப முடிகிறதா? 1930ம் ஆண்டின் பின்பகுதியில் 'சந்திரகாந்தா' மாத்ருபூமி மற்றும் யயாதி' எனும் படங்களில் நடித்த பின்னும், பி யூ சின்னப்பாவினால், திரை உலகில் நன்றாகப் பிரகாசிக்க முடியவில்லை அதனால், மிகவும் வெறுப்படைந்த சின்னப்பா தன் சொந்த ஊரான புதுக்கோட்டைக்கே திரும்பி விட்டார் சின்னப்பாவின் மனக்கிலேசத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட டி ஆர் சுந்தரம் அவரை மிகுந்த பிரயாசையுடன் சேலத்திற்கு வரவழைத்து 'உத்தமபுத்திரன்' படத்தில் நடிக்க வைத்தார் படம் மிகவும் வெற்றி பெறவே சின்னப்பா எனும் நட்சத்திரம் மீண்டும் உதயமானார்.

## முதலாளி (7)

டி ஆர் சுந்தரம் வெற்றிப் படங்களையே தந்து கொண்டிருக்கிறார் என்று பெயர் வாங்கினாலும் அவருக்கும் மனக்குறை இருக்கத்தான் செய்தது தமிழகத்தில் அப்போது பிரபலமாக இருந்த எல்லா நட்சத்திரங்களையும் தன் ஸ்டுடியோவிற்குள் அழைத்து வந்து விட்ட டி ஆர் சுந்தரம் ஒருவரை மட்டும் அவரால் தன் படங்களில் நடிக்க வைக்க முடியவில்லை அவர்தான் ஏழிசை மன்னர் எம் கே தியாகராஜ பாகவதர்



எந்தக் காரணத்தினாலோ, பாகவதருக்கும், இவருக்கும் ஒன்று சேரும் ராசி இல்லாமல் போய்விட்டது இத்தனைக்கும் பாகவதர் அப்போது சேலம், "சங்கர் பிலிமஸ்' எடுத்த 'அம்பிகாபதி'படத்தில் கூட நடித்தார் மாடர்ன் தியேட்டர்சிலும் ஒரு படத்திற்கு ஒப்பந்தம் ஆனார் ஆனால், படப்பிடிப்பு தான் நடைபெறவில்லை இதற்குப் பின் ஒரு கதையே இருக்கிறது டி ஆர் சுந்தரம் பாகவதரை வைத்து "பில்ஹணன் எனும் கதையை படமாக்க முடிவு செய்தது. பாகவதரை சேலத்திற்கு வரவழைத்தார் பாகவதர் கதாநாயகன், கே.எல் வி வசந்தா கதாநாயகி

சேலம் வந்த பாகவதர், முதலில் ஸ்டுடியோவைப் பார்க்க விரும்பினார் அவரைத் தன் காரிலேயே அழைத்து போனார் டி ஆர் சுந்தரம் ஸ்டுடியோவின் ஒவ்வொரு பிரிவையும் அவருக்கு சுற்றி காண்பித்தார் பாகவதருக்கு மிகவும் மகிழ்ச்சி ஆனால் டைரக்டரிடம் ஒரு வேண்டுகோளை வைத்தார் "எனக்கென்று ஒரு தனி 'மேக்கப்' அறை வேண்டும் என்றார் 'அதற்கென்ன கட்டிவிட்டால் போயிற்று என்ற டைரக்டர் உடனே அதற்கும் ஏற்பாடு செய்யச் சொன்னார் படப்பிடிப்புக்கு இருபது நாட்கள் இருக்கும்போது, பாத்ரூமுடன் அவருக்கு ஒரு மேக்கப் ரூம் தயாரானது அருகிலேயே கதாநாயகிக்கும் ஒரு மேக்கப் ரூம் கட்டப்பட்டது

படப்பிடிப்புக்கு நாள் நெருங்கி வந்த வேளையில், திடீரென ஒரு அதிர்ச்சியான செய்தி 'லட்சுமிகாந்தன்' கொலை வழக்கில் பாகவதர் கைது செய்யப்பட்டார்

இதனால் தான் பாகவதர் மாடர்ன் தியேட்டர்சில் நடிக்க இயலாமல் போனது ஏஞ்சல் பிலிமஸ் கம்பெனியில் இருந்து பிரிந்து வந்த பின் டி ஆர் சுந்தரம் மாடர்ன் தியேட்டர்சுக்காக மட்டும் படங்களை எடுத்தார் கூட்டாக யாரையும் முதலில் சேர்த்துக் கொள்ளவில்லை ஆனால். அவரது பிடிவாதத்தைத் தளர்த்தியவர் எட்டயபுரம் மகாராஜா காசிவிஸ்வநாத பாண்டியன் தன்னுடன் ஸ்டுடியோ அதிபர் கூட்டு சேர்ந்து ஒரு படம்

எடுக்க விரும்பினார் மகாராஜா அவரது வேண்டுகோளை தட்ட முடியாமல் டி ஆர் சுந்தரம் எடுத்த படம் தான "தயாளன்" பி யூ சின்னப்பா நடித்தது இதற்குப் பின பலருடன் கூட்டு சேர்ந்து படங்கள் எடுத்தார் டி ஆர் சுந்தரம்.

தொடர்ச்சியாக வெற்றிப் படங்களை தந்ததோடு நில்லாமல், ஒரு பெரிய ஸ்டுடியோவை திறம்பட நிர்வகித்து வருகிறார் என்பதால் டி ஆர் சுந்தரம் பட உலகில் மிகவும் முக்கியஸ்தராகக் கருதப்பட்டார்

தென இந்திய பிலிம் வர்த்தக சபை என்றொரு ஸ்தாபனம் சென்னையில் இருந்தது. ஸ்டுடியோ முதலாளிகள் பெரிய டைரக்டர்கள் போன்றோர் இதில் அங்கத்தினர்களாக இருந்தனர் எச் எம் ரெட்டி கே சுப்பிரமணியம் எஸ் எஸ் வாசன போன்ற பிரபலங்கள், இந்த வர்த்தக சபைக்குத் தலைவர்களாக இருந்தனர் தகுதி வாய்ந்தவர்களுக்கு மட்டும், இங்கே தலைவர் பதவி தரப்பட்டது அந்த வரிசையில் டி ஆர் சுந்தரம், 1949-50ல் தலைவரானார் அப்போது அவர் இச்சபைக்குச் செய்த சேவையில பலர் நன்மை அடைந்தனர்.

அவர் மீண்டும் 1956-1959ல் தலைவரான போது, ஒரு முக்கியமான வேலையை முடிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டார் பலரால் முயற்சித்தும் முடியாத விஷயமாக இருந்தது அது அதாவது, பிலிம் சேம்பருக்கு சொந்தக் கட்டடம் கட்டுவது அல்லது வாங்குவது நீண்ட நாட்களாக இழுபறியாக இருந்த இந்த விஷயத்தை முடிக்க மிகவும் தீவிரமாக இறங்கினார் டி ஆர் சுந்தரம் அவருக்கு உதவி செய்ய பல தயாரிப்பாளர்களும் ஸ்டுடியோ முதலாளிகளும் முன வந்தனர் அப்போதைய மவுண்ட் ரோட்டில் எச் எம் வி கட்டடத்தின மூலம், சேம்பருக்காக ஒரு இடத்தைப் பிடித்தார் அதைச் சொந்தமாக்கிக் கொள்ள மனம் இருந்தாலும் இடத்தை வாங்கப் பணத்தட்டுப்பாடு ஏற்பட்டது

அந்த சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கட்டடத்தை வாங்குவதில் இனியும் தாமதம் ஏற்படக்கூடாது என்று நினைத்த டி ஆர் சுந்தரம், தன் சொந்தப் பணத்தைக் கொடுத்து தேவையை நிறைவு செய்து, கட்டடத்தை வாங்கி அதில பிலிம் சேம்பர் வர்த்தக சபையை ஸ்தாபித்தார் இது ஒரு மகத்தான சாதனை என்று பட உலகத்தினர் பாராட்டி வர்த்தக சபைக்கு அருகில் இருந்த தெருவிற்கு "டி ஆர் சுந்தரம் அவின்யூ" எனும் பெயரையும் சூட்டி மகிழ்ந்தனர்

இதே பிலிம் சேம்பர் கட்டட வளாகத்தில் டி ஆர் சுந்தரத்தின சிலை அப்போதைய தமிழக முதலவர் கருணாநிதியால திறந்து வைக்கப்பட்டது அந்த சமயத்தில, அவர் ஆற்றிய பேருரையில் டி ஆர் சுந்தரம் மீது அவர் வைத்திருந்த பாசம் தெரிந்தது

சர்வாதிகாரி படத்தை

டி ஆர் சுந்தரம் எடுக்க முடிவு செய்திருந்த போது, அதற்கு அவர் வைத்திருந்த பெயர், 'வீரவாள்' என்பதாகும் அதாவது ஆங்கிலப் படத்தின் நேரடி மொழிபெயர்ப்பு இந்தப் பெயர் மாறியதற்கு மிகவும் முக்கியமான ஒரு சம்பவம் உண்டு

'சர்வாதிகாரி' படப்பிடிப்பு தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது அப்போது அந்தப் படத்திற்கு, 'வீரவாள்' என்று தான பெயர்

ஒரு நாள் படப்பிடிப்பு "முதலியார் தோப்பு" எனும் இடத்தில் ஏற்பாடாகியிருந்தது அந்தத் தோப்பிற்குள், சிறிய ஓடை எப்போதும் ஓடிக் கொண்டே இருக்கும் அந்த ஓடையைக்

கடக்க. அமைச்சர் கைப்பாவையாக இருந்த அஞ்சலிதேவியும் அவரது தோழியான அங்கமுத்துவும் நான்கு குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியில் வருவர்.
அதே சமயம் பின்னால் சற்று தள்ளி இன்னொரு வண்டியில் கதாநாயகனான எம்.ஜி.ஆரும், தளபதியான நாகையாவும் வருவர். தளபதி நாகையாவின் மெய்க்காப்பாளர் வேடம் தான் எம்.ஜி.ஆருக்கு! அரசரை சந்திக்க இவர்கள் போவர். முன்னால் செல்லும் அஞ்சலிதேவியின் வண்டியின் சக்கரம் ஓடையின் சேற்றில் சிக்கிக் கொள்ளும். குதிரைகள் இழுக்க முடியாமல் தடுமாறும். எம்.ஜி.ஆர் எஜமானரிடம் உத்தரவு பெற்று அஞ்சலிதேவியின் சாரட் வண்டியை நகர்த்த வேண்டும். அந்த சமயத்தில்தான் கதாநாயகன் - நாயகிக்கிடையே பார்வை பரிமாற்றம் நடைபெறும். அதுவே காதலாக மாறும். இது தான் அன்று எடுக்கப்பட வேண்டிய சீன்.
இந்தக் காட்சியை படமாக்க நடிக நடிகையர் மற்ற டெக்னீஷியன்கள் உட்பட எல்லாரும் தயாராக இருந்தனர். வெளிப்புறப் படப்பிடிப்பு என்றால், காலையில் எட்டு மணிக்கெல்லாம் லோகேஷனில் இருக்க வேண்டும். டைரக்டர் டி.ஆர் சுந்தரம் வந்துவிட்டார். நேரம் போய்கொண்டே இருந்தது. ஆனால் படப்பிடிப்புக்குத் தேவையான இரண்டு சாரட் வண்டிகள் வரவே இல்லை. மணி பத்தாகி விட்டது.
எல்லாமே திட்டமிட்டபடி குறித்த நேரத்தில் நடக்க வேண்டும் என்று நினைப்பவர் டி.ஆர் சுந்தரம். அவர் சொன்ன தேதியில் தான் படமும் ரிலீஸ் ஆகும். அப்படிப்பட்டவருக்கு இந்தத் தாமதம் எவ்வளவு கோபத்தை உண்டாக்கியிருக்கும் பாருங்கள்.
கோபத்தினால் முகம் சிவக்க காரை அனுப்பி புரொடக்ஷன் மானேஜர் வேணுவை அழைத்து வரச் சொன்னார்.

வாரமலர் இதழில் வெளியாகும் மாடர்ன் தியேட்டர்ஸ் டி.ஆர் சுந்தரத்தின் வாழ்க்கை வரலாறு தொடர் மிகவும் அருமை. என் பால்ய வயதில் நடிக்கும் ஆர்வத்துடன் மாடர்ன் தியேட்டர்ஸ்'க்கு இரண்டு கடிதம் எழுதினேன். இரண்டு கடிதத்திற்கும் உடனுக்குடன் பதில் வந்தது.
எனக்கு வாய்ப்பு கொடுக்கவில்லை என்றாலும் "தங்கள் சேவையை பயன்படுத்திக் கொள்ள இயலாமைக்கு வருந்துகிறோம்" என்ற வாசகத்துடன் பதில் வந்தது. கடிதத்தைப் பார்த்ததும், வாய்ப்பு கொடுக்கவில்லையே என்ற ஏக்கம் உடனே நீங்கிவிட்டது.
தங்கள் சேவையை பயன்படுத்திக் கொள்ள இயலாமைக்கு வருந்துகிறோம் என்ற மனிதநேய வார்த்தைகள் என்னை மகிழ்வித்தன. இதற்காகவே, டி.ஆர் சுந்தரத்தின் நிர்வாகத் திறமையை என் மனம் பாராட்டிக் கொண்டே யிருக்கிறது.

*இப்படி எழுதியிருப்பவர் திரைப்படம் மற்றும் 'டிவி' தொடரில் நடித்து வரும் நடிகர் எம்.எஸ் பெருமாள்.*

...

## முதலாளி. (8)

மறுநாள் நடக்க இருந்த "சர்வாதிகாரி பட ஷூட்டிங்குக்காக நான்கு குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியை, "முதலியார் தோப்பு என்ற இடத்துக்கு அனுப்ப புரொடக்ஷன் மானேஜர் வேணுவிடம் முதல நாளே கூறியிருந்தார் டி ஆர் சுந்தரம் மறுநாள் குறிப்பிட்ட நேரத்தில் சாரட் வண்டி வராததால் கோபத்திற்கு ஆளானார் அவர்

ஆனால், புரொடக்ஷன் மானேஜர் வேணு வண்டிகளை காலை ஏழு மணிக்கே 'குடுவம்பட்டி ஓடைக்கு அனுப்பி விட்டார் இது தான் நடந்தது தயங்கித் தயங்கி வேணு இந்த விஷயத்தை கூறிய போது டி ஆர் சுந்தரத்துக்கு கோபம் அதிகமாயிற்றே தவிர குறையவில்லை



'பிளடிபூல் நீ என்ன பெரிய சர்வாதிகாரியா? நான் ஒரு இடத்திற்கு வண்டியை அனுப்பச் சொன்னால், நீ இன்னொரு இடத்திற்கு அனுப்பி இருக்கிறாய் என்று சில நிமிடங்கள் திட்டி ஓய்ந்தார் மூன்று மைல தொலைவில் இருந்த சாரட் வண்டிகள் வேகமாக வரவழைக்கப்பட்டு, பின் படப்பிடிப்பு நடந்தது

இந்த சமயத்தில டி ஆர் சுந்தரத்தின் அருகில் தான இருந்தார் எம ஜி.ஆர் படப்பிடிப்பு நடந்த பின் டைரக்டர் எதை பற்றியோ யோசித்துக் கொண்டு இருந்த போது எம் ஜி.ஆர் , அவரது அருகில போய நின்றார் அருகில வசனகர்த்தா ஆசைத்தம்பி

'என்ன ராமச்சந்திரன , ஏதாவது வேணுமா?'

'ஒன்றும் வேண்டாம்.. ஒரு சிறு விண்ணப்பம்

'சொல்லப்பா .. என்ன விஷயம?'

'நம் படத்திற்கு "வீரவாள் என்று பெயர் வைத்து இருக்கிறீர்கள்

'ஆமாம அதுதானே சரியான மொழிபெயர்ப்பு?

'ஆனால அதைவிட ப பொருத்தமாக 'சர்வாதிகாரி என்று பெயர் வைத்தால் எப்படி இருக்கும்?' என்று கேட்டார் எம.ஜி ஆர்

டி ஆர் சுந்தரம யோசனை செயதார் இரு முறை, "சர்வாதிகாரி' என்று சொல்லிப பார்த்துக் கொண்டே இருந்தார்

பின ஆசைத்தம்பி, மேதாவி போன்றவர்களின யோசனையைக் கேட்டார்

அவர்களும பெயர் நன்றாக இருப்பதாகச் சொலல படத்தின பெயர் "சர்வாதிகாரி என்று உடனே மாற்றப்பட்டது

பல தமிழ் படங்களை இயக்கிய அமெரிக்க நாட்டை சேர்ந்த இயக்குனர் எல்லிஸ் ஆர் டங்கன், அமெரிக்கா சென்ற போது மாடர்ன் தியேட்டர்சை பற்றி அங்கே விவரமாக பேசியிருக்கிறார் "இவ்வளவு வசதிகளுடன் ஒரு ஸ்டுடியோ, தமிழகத்தில் இருக்கிறதா? என்று அங்கிருந்த பெரிய தயாரிப்பாளர்கள் வியப்படைந்துள்ளனர் ஆனால் அவர்களால் இங்கே வந்து படமெடுக்க அப்போது நேரம் இல்லை ஆனால் வில்லியம் பர்க் எனும் டைரக்டர் எல்லிஸ் ஆர் டங்கனுடன் தீவிரமாக விசாரணை நடத்தி இந்தியாவில் குறிப்பாக மாடர்ன் தியேட்டர்சில் ஒரு படம் எடுக்க முடிவு செய்தார்
ஒரு ஹாலிவுட் தயாரிப்பாளர் டி ஆர் சுந்தரத்திடம் கூட்டாக சேர்ந்து இந்தியாவில் படமெடுப்பது அதுவே முதல் முறை அந்த சாதனையையும் டி ஆர் சுந்தரம் தான் நிகழ்த்திக் காட்டினார் புகழ்பெற்ற ஹாலிவுட் நட்சத்திரங்களான ராடு கேமரான் சீசர் ரோமியோ மற்றும் கதாநாயகி மேரிஒன்டர் அதில் நடிக்க ஏற்பாடாகியது இந்தியாவின், முக்கிய நடிகர்களாக எம் என் நம்பியார் காமெடியன் கருணாநிதி ஆகியோர் இதில் நடித்தனர் அந்த படத்தின் பெயர் 'ஜங்கிள்!'
படப்பிடிப்பு, மைசூர் காடுகளில் நடத்துவது என்று ஏற்பாடு ஆகியது. கதையில் இருந்த ஒரு திட்டத்தை அமெரிக்கர்கள் கை விட்டு விட்டனர் அது ஒரு யானையை பற்றிய செய்தி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் உலகத்தில் நடமாடிய யானைகளை பற்றிய விஷயம் அது 'மமூத்ஸ்' என அவற்றை குறிப்பிடுவர் அந்த யானைகளின் தந்தங்கள் மிகவும் நீளமானவை. உடல் பூராவும் ஒன்றரை அடி நீளத்திற்கு, ரோமம் அடர்த்தியாக வளர்ந்திருக்கும் உயரமோ வழக்கமான யானைகளை விட ஓரிரண்டு அடிகள் அதிகம் பார்க்கவே பயங்கரமாக இருக்கும் இந்த யானைகளைப் பற்றி கதையில் இருந்தாலும் படத்தில் இவற்றை வேறுவிதமாக காட்டி விடலாம் என இயக்குனர் டங்கனும் வில்லியம் பர்க்கும் முடிவு செய்தனர் அதாவது யானைகள் விஷயம் ஓரளவுக்கு கைவிடப்பட்டது போலத் தான் இந்த விவரங்களை அந்த வெளிநாட்டு டைரக்டர்கள் லைப்ரரி புத்தகம் ஒன்றில் தேடிப் பிடித்திருந்தனர் அந்த புத்தகத்தில் இருந்த யானையை டி ஆர் சுந்தரம் பார்த்தார் அந்த டைரக்டர்களின் எண்ணம் இவரிடம் சொல்லப்படாததால இவர் காஸ்ட்யூமரை கலந்து ஆலோசித்தார் அவரது எண்ணத்தை, செயலாக்குவதையே தங்களது லட்சியமாக கொண்ட, ஸ்டுடியோ ஊழியர்கள், புத்தகத்தில் உள்ள யானையை போல் செய்யலாம் என்று டி ஆர் சுந்தரத்திடம் உறுதி கூறவே, அவரும் 'முயற்சியுங்கள்' என்று சொல்லி விட்டார் நன்கு உயரமாக காணப்பட்ட சில யானைகள் தேர்வு செய்யப்பட்டன அவற்றின் தந்தங்களும் நன்றாக வளர்ந்திருந்தன ஒரு யானைக்கு 25 ஆயிரம் ரூபாய்க்கு சவுரிமுடி வீதம் 10 யானைகளுக்கு வாங்கி, சவுரி முடி நெசவாளர் 50 பேரை வரவழைத்து யானை அளவுக்கு அந்த முடியை கொண்டு உடை தயார் செய்ய கூறினார் அவர்களும் யானை அளவுக்கு துணியை வெட்டி அதில் முடியை நன்றாக இணைத்தனர் அந்த பெரிய முடி உடையை. யானை மீது போர்த்தியவுடன் "மமூத்ஸ் ரெடியாகி விட்டது இதை பார்த்த அமெரிக்க டைரக்டர்கள் அசந்து போய் விட்டனர் இப்படி கூட தமிழகத்தில் தேவையான பொருளை தர ஒருவர் இருக்கிறாரா என வியந்தனர் எந்தவித சிரமமும் இல்லாமல் அவர்கள் படத்தை ஆறே வாரத்தில் முடித்தனர், என்பது தான் சாதனை
படத்தை முடித்ததும், அடலநாட்டில, 'ஜங்கிள்' படத்தை வெளியிடுவது சம்பந்தமாகவும்

ஹாலிவுட் நகரத்தை பார்த்துவிட்டு வரவும் அமெரிக்க டைரக்டர்கள் அழைத்ததின் காரணமாக அமெரிக்கா சென்றார் டி ஆர் சுந்தரம் அவர் திரும்பி வரும் வரை ஸ்டுடியோவில் வேலை ஏதும் நின்று போய் விடக் கூடாதே அதனால் ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றான, 'வளையாபதி'யை படம் எடுக்க முடிவு செய்து புரட்சிக்கவிஞர் பாரதிதாசனை வைத்து வசனம் எழுத ஏற்பாடு செய்தார்

சவுகார் ஜானகிக்கு, இது, மாடர்ன் தியேட்டர்சில் முதல் படம் கதாநாயகன் முத்துக்கிருஷ்ணன் என்கிற ஒரு நாடக நடிகர் டி ஆர் சுந்தரம் டைரக்ட் செய்வதாக இருந்தது இந்த சமயத்தில் அமெரிக்க அழைப்பை தட்ட முடியாமல், அவர் அமெரிக்கா சென்றார் அங்கே போய்விட்டு மறுநாளே திரும்பி வர முடியுமா? மூன்று மாதங்கள் ஆயிற்று. டி ஆர் சுந்தரம் ஊரில் இல்லை ஆனால் தொழில் ஒழுங்காக நடந்தது தலைவன் இல்லை என்றாலே ஏதாவது ஒரு பிரச்னை எங்கும் முளைப்பது சகஜந்தானே? மாடர்ன் தியேட்டர்சிலும் பிரச்னை கிளம்பியது இதுவரை தலைவரின் பேச்சுக்கும் பார்வைக்கும் கட்டுப்பட்டு வேலை செய்து கொண்டிருந்த இதே தொழிலாளர்கள் அரசியல்வாதிகளின் கைப்பாவையாக மாறினர் கம்யூனிஸ்ட் கட்சி உள்ளே நுழைந்து விட்டதாக பேசிக் கொண்டனர் ஓவர் டைம் செய்தால் கூலி, எட்டுமணி நேரத்திற்கு மேல் வேலை செய்ய முடியாது. வாராந்திர விடுமுறை என பல கோரிக்கைகள் வைக்கப்பட்டன இதில், முதலாளியின் ஆட்கள் தொழிலாளர்களின் ஆட்கள் என்று இரு கோஷ்டி பிறந்தது. சலசலப்பு அதிகமானதே இதனால் தான் அப்போது இருந்த தற்காலிக நிர்வாகத்தினரால் இந்த பிரச்னைகளை சமாளிக்க முடியவில்லை டி ஆர் சுந்தரம் இல்லாமல் இவர்கள் எப்படி முடிவு எடுக்க முடியும்? வேலைகள் எல்லாமே மிகவும் தாமதமாக நடந்தன மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோ இயங்கும் வேகம் இப்போது தடைபட்டது டி ஆர் சுந்தரம் திரும்பி வந்தார் ஒரே நாளில் நிலைமையை புரிந்து தொழிலாளர் தலைவனாக இருந்த நபரை அழைத்துப் பேசினார் எந்த விதமான உடன்பாடும் ஏற்படவில்லை அதனால் படப்பிடிப்பு விடாமல் நடக்க என்ன சவுகர்யங்கள் தேவையோ அவைகளை மட்டும் செய்து கொடுத்தார் ஆனால், தொழிலாளர்களின் ஒரு பகுதியினர் மட்டும் தங்களது விரோத போக்கை கைவிடவில்லை இதனால் சட்டப்படி என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமோ, அதை டி ஆர் சுந்தரம் எடுத்தார் வழக்கு லேபர் கோர்ட்டில் நடந்தது. கோர்ட் தீர்ப்பு வந்தால் பல தொழிலாளர்கள் வேலையை விட்டு நீக்கப்படுவர் சட்டம் தன் கடமையை செய்து விடுமல்லவா? அதற்கு பின் ஒரு நாள், படப்பிடிப்பு முடிந்து. இரவு மணி இரண்டாகி விட்டது. நடிக நடிகையர் டெக்னிஷியன்கள் எல்லாரும் வீடு திரும்ப வேண்டும் இவர்கள் திரும்பும் போது இவர்களை வழிமறித்து தாக்குவது என்று வேலையிலிருந்து சட்டப்படி நீக்கப்பட வேண்டிய தொழிலாளர்கள் சிலர் திட்டம் போட்டு வைத்திருந்தனர் இந்த தகவல் விசுவாசமான ஒரு தொழிலாளிக்கு தெரிய வர அந்த நபர் டி ஆர் சுந்தரத்திடம் விஷயத்தை சொல்லி விட்டார் இந்த தகவலை தெரிந்து கொண்ட டி ஆர் சுந்தரம்,'என்ன நடக்கிறது என்பதை பார்த்து விடுவோம் என்று சொல்லி, அப்போது அருகில் இருந்த கேமராமேன் ஜி ஆர் நாதனிடம், 'நீ காரை எடுப்பா நாம் முதலில் போவோம் நமக்கு பின்னால் எல்லா வண்டிகளும் வரட்டும் என்றார்

## முதலாளி. (9)

மாடர்ன தியேட்டர்ஸ தொழிலாளர்கள் பிரச்னை காரணமாக ஷூட்டிங் முடிந்து நடிக-நடிகையர்கள வீடு திருமபும போது காரை வழி மறித்து தாக்குவது என சில தொழிலாளிகள முடிவு செயதிருந்தனர் இந்த பிரச்னையை சமாளிக்க டி ஆர் சுந்தரம ஒரு யுக்தி செயதார் அதனபடி நடிகர்களின காருக்கு முனபாக தான செல்வது என்று முடிவு செயது டி ஆர் சுந்தரமே வண்டியை எடுத்தார் வண்டியில கேமராமேன் மற்றும இந்த சதி பற்றி தகவல் தந்த நபர் மட்டுமே இருந்தனர் கார் ஓட ஆரம்பித்தது. ஸ்டுடியோவை விட்டு ஒரு கி.மீ தூரம் வந்ததும், மேற்கொண்டு போக முடியாமல பாதையின் குறுக்கே கற்கள் அடுக்கி வைக்கபபட்டிருந்தன



அந்த இடத்தில காரை நிறுத்தி மற்றவர்களை காரில் இருந்து இறங்க வேண்டாம் என்று கட்டளையிட்டவர் காரை விட்டு இறங்கி, கற்களை ஒவ்வொன்றாக நகர்த்தினார் டி ஆர் சுந்தரம இரண்டொரு கற்களை அபபுறபபடுத்தியதுதான தாமதம மறைந்திருந்த நபர்களுக்கு என்ன தோன்றியதோ "திபுதிபு'வென மறைவிடத்திலிருந்து வெளியே வந்து டி ஆர் சுந்தரத்தின் காலில விழுந்து "முதலாளி எங்களை மன்னித்து விடுங்கள் என்று அழுதனர் அவர்கள் தான் இந்த தவறைச் செயதனர் என்பது தெளிவாகி விட்டது காரின் முகப்பு விளக்கு வெளிச்சத்தில் பார்த்த போது, அவர்கள் அனைவரும, வேலையிலிருந்து சட்டபபடி நீக்கபபட வேண்டிய தொழிலாளிகள என்று தெரிந்தது.

அவர்கள் அனைவரும காலில விழுந்து கதறவே டி ஆர் சுந்தரத்தின மனம இளகிவிட்டது "நீங்கள எலலாரும நாளை காலை ஸ்டுடியோவுக்கு வாருங்கள் என்று கட்டளையிட்டு, திரும்பினார் அதன்பின்னரே, நடிக நடிகையர் மற்றும பிற தொழிலாளர்கள் பத்திரமாக வீடு திரும்பினர் மறுநாள் காலையில் படபிடிப்பை கேன்சல் செயதுவிட்டு வந்திருந்த தொழிலாளர்களை அதாவது வழக்குப போடபபட்டிருந்தவர்களை, அழைத்துப் பேசினார் சமபந்தபபட்ட நபர்களும ஸ்டுடியோவின் இதர நிர்வாகிகளும விசாரணையில் கலந்து கொண்டனர் தொழிலாளர்கள தான அபபட்டமாகத் தவறு செயது இருக்கின்றனர் எனபதை அவர்களுக்கு புரிய வைத்தார் டி ஆர் சுந்தரம லேபர் கோர்ட முடிவு வந்தால

அவர்கள் நிரந்தரமாகப் பணி நீக்கம் செய்யப்படுவர் என்பதையும் அவர்களுக்கு தெளிவுபடுத்தினார் தொழிலாளர்கள் தங்களது குற்றத்தை ஒப்புக் கொண்டு மன்னிப்பு கேட்டனர்

டி ஆர் சுந்தரம் அவர்கள் மீது லேபர் கோர்ட்டில் போட்டப்பட்டு இருந்த வழக்கை வாபஸ் பெற்றது மட்டுமல்லாமல், அவர்களுக்கு மீண்டும் ஸ்டுடியோவில் வேலை தந்தார் மேலும் விட்டுப் போன சம்பளத்தையும், தீபாவளி போனசையும் சேர்த்தே கொடுத்தார் தொழிலாளர்கள் செய்த தவறுதான் என்ன?

*அப்போது துவாரகா ஓட்டலில் தங்கியிருந்த நடிக நடிகைகளை படப்பிடிப்புக்குப் போக விடாமல் தடை செய்தது

*வேலைக்குச் சென்ற உண்மையான தொழிலாளர்களை, வேலைக்குப் போக வேண்டாம் என்று தடுத்து மறியல் செய்தது

*படப்பிடிப்பிற்கு வந்த சாப்பாட்டு வேனை மறித்து திருப்பி அனுப்பியது

இவை எல்லாம் நிரூபிக்கப்பட்ட தவறுகள்

டி ஆர் சுந்தரத்தின் ஸ்டுடியோ நிர்வாகம் மிகவும் சிறப்பாக இருந்தது என்பதை, சென்னை ஸ்டுடியோ அதிபர்கள் வாயாரப் புகழ்ந்த நிகழ்ச்சிகள் நிறைய உண்டு

முதன்முதலாக டி ஆர் சுந்தரம் சிங்களப் படம் ஒன்றைத் தயாரிக்குமாறு, அவர் நண்பரும் டைரக்டருமான சிலோன் குணரத்னா வற்புறுத்தினார் ஊக்கம் கொடுக்க ஆட்கள் இருக்கும்போது படம் எடுக்க அவருக்கு யாரும் சொல்லித் தர வேண்டியதில்லை

மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரித்த முதல் சிங்களப்படம் சுஜாதா இது 1953ல் தயாரிக்கப்பட்டது இந்தப் படம் ஒரு கூட்டுத் தயாரிப்பு என்றாலும் டி ஆர் சுந்தரம் மற்றும் டி வி சாரி இதை இயக்கினர்

படம் இலங்கையில் இலங்கை நடிக - நடிகையர் நடித்ததால் பெரும் வெற்றி பெற்றது குணரத்னாவுக்கு மிகவும் திருப்தி திரும்பவும் அவர் மாடர்ன் தியேட்டர்சுடன் கூட்டு சேர்ந்து படம் தயாரிக்க விரும்பினார்

கடந்த 1953ல் துவங்கிய இந்தக் கூட்டுத் தயாரிப்பு 1960ம் ஆண்டு வரை நீடித்தது ஏழு படங்களை சிங்களத்தில் எடுத்தாலும் தமிழ்படங்களிலும் டி ஆர் சுந்தரம் கவனம் செலுத்தத் தவறவில்லை சிங்களக் கதாசிரியர்கள் மற்றும் வசன பாடலாசிரியர்கள் ஆகியோரை தன் உதவியாளர்களாக வைத்துக்கொண்டு, ஒவ்வொரு படத்திற்கும் தேவையான வெளிப்புறக் காட்சிகளை இலங்கையிலேயே போய் எடுத்து வெற்றி கண்டார் டி ஆர் சுந்தரம் இங்கிருந்தே தன் டெக்னிஷியன்களை உடன் அழைத்துச் சென்றார் என்பது தான் குறிப்பிடப்படவேண்டிய விஷயம்

அவ்வளவு படங்களும் இலங்கையில் நல்ல வசூலைக் கொடுத்தன டி ஆர் சுந்தரத்துக்கு முன்போ இல்லை அவருக்குப் பின்போ யாரும் தங்களது ஸ்டுடியோவில் இவ்வளவு சிங்களப் படங்களை எடுத்ததாகச் சரித்திரமே இல்லை

மந்திரிகுமாரி படத்திக்குப் பின் சிவாஜி நடித்து கருணாநிதி கதை வசனம் எழுத டி ஆர் சுந்தரம் இயக்கிய படம் திரும்பிப்பார்!

படப்பிடிப்புக்கான சகல ஏற்பாடுகளும் வேகமாக நடந்தன இந்த இடத்தில் தன் ஸ்டுடியோ தொழிலாளர்களின் மீது டி ஆர் சுந்தரம் வைத்திருந்த அபார நம்பிக்கையைப் பற்றிக் குறிப்பிட்டே ஆக வேண்டும் மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோ என்பது ஒரு தொழிற்சாலையைப் போல என்று அப்போது எல்லாரும் சொல்வர் சிவாஜிக்கு அதிக உடைகள் போட்டு மகிழ்ந்த இடம் இந்த ஸ்டுடியோதான்

ஸ்டுடியோவிற்கு வரும் முன் சிவாஜியின் உடல் அளவு தெரிந்தால் நன்றாக இருக்குமே என்று நினைத்த காஸ்டியூமர் டி ஆர் சுந்தரத்திடம் சிவாஜிக்கான ஆடைகளின் அளவை எடுத்துக் கொள்ள அனுமதி கேட்டார்

அனுமதி கேட்ட நபரிடம் டி.ஆர் சுந்தரம் ஒரு புகைப்படத்தை கொடுத்தார் அது சிவாஜியின் புகைப்படம் நின்று கொண்டிருந்த கோலத்தில் எடுத்தது

'இந்தப் படத்தைப் பார்த்து அளவுகளைத் தெரிந்து கொள் இதற்காக சென்னை போய் வரவேண்டிய அவசியமில்லை ' என்று சொல்லி விட்டார்

ஸ்டுடியோவில் இருந்த இதர நிர்வாகிகள் இந்த காஸ்டியூமர் தைப்பது நன்றாக இருக்காது என்று நினைத்து, சேலத்தில் அப்போது மிகவும் பிரபலமாக இருந்த ஒரு தையற்கடை அதிபரையும் உடை தைக்க கூறியிருந்தனர் நேரு அந்த காலத்தில் அணிந்திருந்ததை போல, சிவாஜி கணேசன் அளவுக்கு ஒரு 'செட் உடை தைக்க வேண்டியிருந்தது தன்னிடம் டி ஆர் சுந்தரம் கொடுத்த புகைப்படத்தின் உருவ அமைப்புக்கு ஏற்றவாறு உடைகளைத் தைத்து விட்டார் ஸ்டுடியோ காஸ்டியூமர் வெளியில் கொடுத்திருந்த ஆடைகளும் வந்துவிட்டன சிவாஜி ஸ்டுடியோவுக்கு வந்தவுடன் முதலில் காஸ்டியூமரைத்தான் அழைத்தார் உடைகள் ஏற்கனவே தைத்தாகி விட்டன என்றவுடன், சிவாஜிக்கு வியப்பு.

நிர்வாகிகள் முதலில் வெளியில் தைக்கப்பட்ட ஆடைகளை சிவாஜியிடம் கொடுத்தனர் அவரும் அதை போட்டுப் பார்த்தார் அவ்வளவு சரியாக இல்லை எங்கெங்கோ சரிசெய்ய வேண்டும் போல இருந்தது

அதைக் கழற்றிக் கொடுத்த பிறகு ஸ்டுடியோவில் தைக்கப்பட்ட ஆடைகள் வரிசையாகக் கொண்டு வரப்பட்டன ஒவ்வொன்றும் அவருடைய அளவுக்கு ஏற்றாற்போல் கச்சிதமாக இருந்தன நேரு டிரஸ் அவருக்கு மிகவும் அற்புதமாகப் பொருந்தியது.

அங்கே வந்த டி ஆர் சுந்தரம் உடைகளைப் பார்த்து லேசாகப் புன்னகைத்தார் தன் தொழிலாளிக்கு அவர் கொடுத்த பாராட்டு அது "இதைத் தைத்த காஸ்டியூமரை நான் பார்க்க வேண்டுமே.,' என்றார் சிவாஜி

'இதோ இவர்தான் என்று அருகில் இருந்த ஓர் இளைஞரைச் சுட்டிக் காட்டினர் மிகவும் ஒல்லியாக இருந்த நபரை சிவாஜி ஏற்றுக்கொள்ள வில்லை

'வேறு யாராவது இருக்கலாம்..' என்றார்

'இங்கே இருக்கும் ஒரே காஸ்டியூமர் இவர்தான். இவர்தான் உங்கள் புகைப்படத்தைப் பார்த்து ஆடைகளைத் தைத்தவர்' என்று சொல்ல, சிவாஜி வியந்து, காஸ்டியூமரின் இரு கைகளையும் பிடித்து குலுக்கினார்.

அந்த காஸ்டியூமர் தான் அர்த்தனாரி. மாடர்ன் தியேட்டர்ஸ் படங்கள் எல்லாவற்றுக்கும் காஸ்டியூமராகப் பணியாற்றியவர். திருச்செங்கோட்டில் பிறந்ததால் அர்த்தனாரி என்ற பெயரை, டி.ஆர்.சுந்தரத்தின் தந்தை ராமலிங்க முதலியார் தான் வைத்தார்.

## முதலாளி. (10)

கடந்த 1955ம் ஆண்டின் ஆரம்பத்தில் டி ஆர் சுந்தரம் புரட்சிகரமான ஒரு வங்காளக் கதையைத் தேர்ந்து எடுத்தார் அதற்கு திரைக்கதை வசனம் எழுத டைரக்டரும் எழுத்தாளருமான ஸ்ரீதரை ஒப்பந்தம் செய்தார் மகேஸ்வரி என்ற அப்படத்தில் நடித்தவர்கள் ஜெமினி கணேசன் சாவித்திரி மனோகர் தங்கவேலு எம் என் ராஜம் போன்றோர்



பிரிட்டிஷ் ஆதிக்கம் நிறைந்திருந்த சமயத்தில் கடல் கொள்ளைகள் நிறைய நடந்தன இதனால் மக்களுக்குப் பல தொல்லைகள் இந்த தொல்லைகளைத் தவிர்க்க, மக்களுக்குப் புனர்வாழ்வு கொடுக்க ஒரு பெண் தயாரானாள் அவள் தான் மகேஸ்வரி தலைவியாக உருவெடுத்து தனக்கென்று ஒரு கும்பலைச் சேர்த்துக் கொண்டு போராட முன் வருகிறாள் அவளது கூட்டத்தை சேர்ந்தவர்கள் 500 பேருக்கு மேல் ஆற்றின் இக்கரைக்கு வராவண்ணம் ஆங்கிலேய கொள்ளையர்களை அவள் தடுத்து நிறுத்த வேண்டும்- ஆங்கில சிப்பாய்கள் 500 பேர் அவர்கள் 100 படகுகளில் வர, ஆற்றின் நடுவே போர்க்களம் பொங்கி வரும் காவிரி ஆற்றின் கரையில் இந்தக் களம் அமைக்கப்பட்டது தொடர்ந்து பதினைந்து நாட்கள் படப்பிடிப்பு நடக்க இருந்ததால் நடிகர்கள் பரிசலகாரர்கள், படப்பிடிப்புக் குழுவினர் போர் வீரர்கள் என்று ஏறக்குறைய 2000 பேர் ஒகேனக்கலில் குழுமி இருந்தனர் இவர்களுக்கு ஒரு குறையும் இல்லாமல் சகல ஏற்பாடுகளும் செய்திருந்தார் டி ஆர் சுந்தரம் மகேஸ்வரி படம் வெளியாகி நன்றாக ஓடியது புதிய கதை, பெரிய நடிகர்கள், பெரிய வசனகர்த்தாவான ஸ்ரீதர் ஆகியோரின் கூட்டு முயற்சியே இந்தப் படம் இதைத் தொடர்ந்து வெளிவந்தது தான் தமிழகத்தின் முதல் கேவா கலர் படம்- 1955ல் வெளியாகிய அலிபாபாவும் நாற்பது திருடர்களும்'

அலிபாபா படத்தை எடுப்பது என்று முடிவு செய்த டி ஆர் சுந்தரம் ஏற்கனவே இரண்டு வெற்றிப படங்களைக் கொடுத்த எம் ஜி ஆரை கதாநாயகனாகப போட்டார் கதாநாயகி பி பானுமதி. வில்லனாக வீரப்பா காமெடியன்களாக தங்கவேலு கே சாரங்கபாணி மற்றும எம ஜி சக்ரபாணி எம என ராஜம போன்றோர் நடிக்க ஒப்பந்தம செயயபபட்டனர் இந்தப்படம கேவா கலரில எடுக்கப்பட்டது புதுமை என்றாலும் அந்தப புதுமையைச் செயதவர் உளளூர்காரரான டபிள்யூ ஆர் சுப்பாராவ எனனும கேமரா நிபுணர் மாடர்ன தியேட்டர்சில தயாரானவர் இவர்தான அபபோது எடுக்கபபட்ட வீரபாண்டிய கட்ட பொம்மனுக்கும் புகைப்பட நிபுணராகப் பணியாற்றியவர்
கேவா கலரில் அபபோது படம் எடுத்தது ஒரு துணிச்சலான முயற்சி என்று தான் சொல்ல வேண்டும ஆர்ட் டைரக்டராகப பணியாற்றிய ஏ ஜே டோமினிக் மாடர்ன தியேட்டர்சில வளர்ந்த இன்னொரு அற்புதக் கலைஞர்
அபபோது எடுக்கபபட்ட எலலாப படங்களுக்கும் அவர்தான ஆர்ட் டைரக்டர் அலிபாபா படத்தில முக்கியமான காட்சியே குகைதான் இந்தக் குகைக்குள நாறபது திருடர்கள் மற்றும் குதிரைகளில் வந்து செலல வேண்டும இதற்கு நல்ல குதிரைகள வேண்டும குதிரை சமபந்தமான சீன்களை டி ஆர் சுந்தரம் மைசூரில எடுத்தார் அங்கே இருந்த ரிசர்வ் போலீஸ் அதிகாரிகளுடன் பேசி அவர்களிடமிருந்து குதிரைகளையும் ஆட்களையும் தயார் செயது கொண்டார் குதிரைகள் பார்க்க கம்பீரமாக இருந்தன விலலன வீரப்பா குதிரை மீது தன ஆட்களுடன வருவதாகக் காட்சி வந்தபின் குகைக்குள நுழைய வேண்டும பத்து நாட்கள் நடந்த இந்த படபபிடிபபுக்காக மைசூரில எலலாரும தங்கினர் இதற்காக குகை "செட் இரண்டு இடங்களில போடப்பட்டது வீரபபா "மந்திரத்தை சொன்னதும குகையின் கதவு தானாகத் திறக்க வேண்டும அதற்காக பெரிய முன் கதவு அமைத்து, "செட் போடப்பட்டு படப்பிடிபபு நடந்தது அதைப போலவே சேலத்தில ஏற்காடு மலை அடிவாரத்திலும் ஒரு "செட் போடப்பட்டது ஸ்டுடியோவிற்கு வெளியே மற்றும் உள்ளே படபபிடிபபு நடத்த, ஸ்டுடியோவிலும இனனொரு "செட் போடபபட்டது படத்திற்கு குதிரைகள் வேண்டுமே டி ஆர் சுந்தரம இருபது குதிரைகளை விலைக்கே வாங்கிக் கொண்டு வந்து விட்டார் அதற்குப பினதான, குகை சம்பந்தப்பட்ட வெளிபபுற காட்சிகள் தொடர்ந்து படமாக்கப்பட்டன
அலிபாபாவில் சிக்கலான விஷயம் இந்த குகை காட்சிகள் மட்டுமல்ல திருடர்கள் ஒளிந்திருந்த பீபாய்களை நீர் வீழ்ச்சியில் ஒவ்வொன்றாகத் தள்ளி விட வேண்டும் இதற்கு ஏற்ற இடம் ஒகேனக்கல் நீர் விழச்சி தான் கே சாரங்கபாணியும் எம என் ராஜமும் மிகவும சிரமத்தோடு பீபபாயகளைத் தள்ள வேண்டும ஒரிரு பீபபாயகளை அங்கே தளளுவது போல படமெடுத்த பின ஸ்டுடியோவில அதற்கு "மேட்சிங்காக செட் போடப்பட்டது. அங்கிருந்து பீபபாய்களை உருட்டுவது போலக் காட்சி அமைக்கபபட்டது ஏ ஜே டோமினிக் போட்ட செட்டுடன ஒரிஜினல நீர்வீழச்சியை இணைத்து அருமையாகப

படப்பிடிப்பை நடத்தினார் சுப்பாராவ்

படத்தை முடித்த பிறகு போட்டுப் பார்த்தவுடன் எல்லாருக்கும் பரம திருப்தி அதே போல் படமும் மிகவும் நன்றாக ஓடியது இந்த சமயத்தில் டி ஆர் சுந்தரம் செய்த ஒரு துணிச்சலான காரியத்தை இங்கே சொல்லியாக வேண்டும்

மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோவைப் பொறுத்த வரையில் யாருக்காகவும், எதற்காகவும் காத்துக் கொண்டு இருக்கும் பழக்கமே இல்லை இதை ஏற்கனவே சுலோச்சனா படத்தில் பி யூ சின்னப்பாவிற்கு பதில் டி ஆர் சுந்தரமே இந்திரஜித்தாக வேடமேற்றார் என்பதைக் குறிப்பிட்டு இருக்கிறேன் அப்படி ஒரு சம்பவம் அலிபாபா பட சமயத்திலும் நடந்தது படம் எல்லாம் முடிந்து விட்ட நிலையில், ஒரு பாட்டும் ஒரு சண்டைக்காட்சியும் மட்டும் பாக்கி இருந்தது பாட்டு டூயட் எம் ஜி ஆர் , மற்றும் பானுமதி சேர்ந்து நடிக்க வேண்டும் சண்டைக் காட்சியில் எம் ஜி ஆர் மட்டும் தேவை.

ஆக, எம் ஜி ஆர் வந்தால் தான் படப்பிடிப்பு நடக்கும் என்ற நிலை நாள் குறித்தாயிற்று கதாநாயகன் படப்பிடிப்புக்கு வரவில்லை படப்பிடிப்பை ஒத்தி வைத்து விடுவர் என்று எல்லாரும் நம்பினர் ஆனால் நடந்ததோ வேறு.

எம் ஜி ஆருக்குப் பதிலாக. ஒரு "டூப் நடிகரைப் போட்டு பாட்டையும் சண்டைக் காட்சியையும் டி ஆர் சுந்தரம் எடுத்து படத்தை முடித்து விட்டார் "டூப்' காட்சியில் நடித்தவர் மாடர்ன் தியேட்டர்சின் நிரந்தர நடிகர், 'கரடி முத்து' என்பவர் இரண்டு மூன்று நாட்களுக்கு பிறகு படப்பிடிப்புக்கு வந்தார் எம். ஜி ஆர் படப்பிடிப்பு நடைபெறும் அறிகுறியே தெரியவில்லை உண்மையைத் தெரிந்து கொள்ள டி ஆர் சுந்தரம் எதிரில் போய் நின்றார் எம் ஜி. ஆர்.

'என்ன ராமச்சந்திரன்? படப்பிடிப்பு முடிந்து விட்டது முடிந்த படத்தை ஒரு தடவை பார்த்து விட்டுப்போ' என்றார் டி ஆர் சுந்தரம்

எம் ஜி ஆர் , படத்தைப் பார்த்தார் டூப் நடிகர் எங்கே நடித்திருந்தார் என்றே தெரியவில்லை அவ்வளவு கச்சிதமாகப் படம் எடுக்கப்பட்டு இருந்தது இதனால்தான் மாடர்ன் தியேட்டர்சுக்கும் எம் ஜி ஆருக்கும் உள்ள தொடர்பு விட்டுப் போயிற்று மனக்கசப்புடன்தான் அவர் வெளியேறினார்

இதற்கு முன் படப்பிடிப்பு சமயத்திலும் ஒரு சின்ன சிக்கல் எம் ஜி ஆர் அதை மிகவும் சாதாரணமாக நினைத்து விட்டார்

அலிபாபாவில் ஒரு வசனம் "அல்லா மீது ஆணையாக என்று ஆரம்பிக்கும் அந்த வசனத்தைப் பேசத் தயங்கினார் எம் ஜி. ஆர் தி மு க வில் அவர் சேர்ந்திருந்த காலம் அது வசனகர்த்தாவிடம் 'அம்மாவின் மீது ஆணையாக என்று மாற்றித் தரச் சொன்னார் வசனகர்த்தா ஏ எல். நாராயணன் அதற்கு உடன்படவில்லை

'எதற்கும் முதலாளியைக் கேட்டு விடுங்கள் என்று அவர் நழுவி விட்டார் படப்பிடிப்பு தினம் எம் ஜி ஆர் , நடிக்கத் துவங்கியதும் "அம்மாவின் மீது ஆணையாக இந்த

அலிபாபா என்று வசனத்தை ஆரமபிக்க டி ஆர் சுந்தரம "கட் கட் என்று சொலலி விட்டார்

"இங்கே பேச வேண்டிய வசனம் "அம்மா"வில் ஆரம்பிக்காது அல்லாவில தான் ஆரமபிக்க வேண்டும அலிபாபாவுக்கு அல்லாதான் தேவை என்று கறாராக சொல்லி விட்டார் டி ஆர் சுந்தரத்திறகு இருந்த அந்தத் துணிச்சல வேறு எந்த இயக்குனரிடமும் இலலாதது இந்தபபடம மிகப பெரிய வெறறியைக் கண்டது அதனால இதைத் தெலுங்கிலும் எடுக்க டி ஆர் சுந்தரம் விரும்பினார் 1955ல் தெலுங்கு படமும ஆரம்பிக்கப்பட்டது ஏற்கனவே பல விஷயங்கள் பழகிப போனதால் தெலுங்குப படப்பிடிப்பு மிகவும் வேகமாக நடந்தது

இந்தப படத்தின தமிழ் தெலுங்கு பதிபபுகளில் டைரக்டர் செய்த புரட்சிகரமான செயல ஒன்றுண்டு அது

படத்தில ஒரு கிளப டானஸ இடம பெறும அபபோது மும்பையில இந்திப படங்களில ஹீரோயினாக நடித்துக் கொண்டு இருந்த வஹிதா ரெஹமானை சேலத்திறகு வரவழைத்து "கிளப"பில் டானஸ ஆட வைத்தார் ஒரு பாட்டிறகாக வட மாநிலத்தில இருந்து ஒரு நடிகையை இறக்குமதி செய்த வகையில, முன்னோடி இவர் தான் படங்களின் வெற்றி தோல்விகளைப பற்றி அவர் சிந்திப்பதே இல்லை ஏனெனில் திட்டமிட்டு தான் எடுக்கும் படங்கள் நிச்சயம் தோல்வியைத் தழுவாது என்பது அவரது தீர்மானமான முடிவு இப்போதெல்லாம மும்பையிலிருந்து சென்னை வந்து போவது மிகவும சர்வ சாதாரணமாகி விட்டது ஆனால 1955ம ஆண்டு மும்பையில இருந்து சேலத்திறகு ஒரு நடிகையை வரவழைப்பது என்றால, அதறகு துணிச்சல வேண்டும, அது அவரிடம் நிறையவே இருந்தது

## முதலாளி. (11)

அலிபாபா படம் எடுக்கும்போது இன்னொரு கடுமையான சோதனையும் ஏற்பட்டது. டி ஆர் சுந்தரத்துக்கு அதிகத் தொல்லை கொடுத்த நிகழ்ச்சி அது "ஆயிரத்திலொரு இரவுகள் கதைகளில் ஒன்றுதான் இந்த அலிபாபா அந்தக் கதையை யார் வேண்டுமானாலும் எடுக்கலாம் இல்லையா? சென்னையில் ஒரு பெரிய தயாரிப்பாளர் ஒருவரும் அலிபாபாவை வண்ணப்படமாக எடுத்தார் சேலத்தில எடுக்கும படத்திற்கு முன் தன படத்தை வெளியிட்டு விட வேண்டும் என்று மிகவும் பாடுபட்டார் ஆனால, டி ஆர் சுந்தரம் அந்தப் படத்திற்கு முன்பே தன் படத்தை வெளியிட்டு, மிகப்பெரிய வெற்றியைக் கண்டார் அதனால மாடர்ன தியேட்டர்ஸ் ஏதாவது ஒரு படத்தை எடுக்கத் திட்டம் போட்டிருக்கிறது என்றால் அதே கதையை வேறு யாரும் எடுக்க யோசிக்கக் கூட மாட்டார்கள்



அலிபாபாவின் வெற்றிக்குப் பிறகு டி ஆர் சுந்தரம் அதே ஆண்டில் இயக்கிய படம்தான் பாசவலை ஜெமினியில் நிரந்தர நடிகராக இருந்த எம.கே.ராதா மாடர்ன தியேட்டர்சில் நடிக்க வந்த முதல் படம "அல்பாதுஷா" எனனும் பழைய நாடகத்தைத் தழுவி எழுதப்பட்ட கதை எம கே ராதா ஜி வரலட்சுமி கோபாலகிருஷ்ணன் மற்றும பலர் நடித்தனர் "லொள் லொள் என்று நாயைப போல் குரைத்துப் பாடி ஆடிட ராஜாமணி என்னும் நடிகையும் இதில் உண்டு இந்தப் படத்தின் பெரும் வெற்றிக்குக் காரணமே பட்டுக் கோட்டையாரின் பாடலகள் தான்

இங்கே அவர் பாட்டு எழுத வந்ததே ஒரு தனிக்கதை ஒரு முறை கலயாணசுந்தரம ரிகர்சல ஹாலுக்கு வந்தார் அங்கே அபபோது புரொடக்ஷன மேனேஜராக இருந்தவர் சுலைமான மாடர்ன் தியேட்டர்சில பிலிம ரெபரசென்டேட்டிவாகத் தன வாழக்கையை ஆரம்பித்தவர்

பாடல் எழுத வாய்ப்பு கேட்டு வந்த பட்டுகோட்டையாரிடம "எங்கே ஒரு பாட்டை எழுதுங்கள் பார்ப்போம்..' என்றார்

பட்டுக்கோட்டையார் எழுதினார்

*குட்டி ஆடு தப்பி வந்தா*
*குள்ள நரிக்குச் சொந்தம்*
*குள்ளநரி மாட்டிக்கிட்டா*
*குறவனுக்குச் சொந்தம்*
*தட்டுகெட்ட மனிதர் கண்ணில்*
*பட்டதெல்லாம் சொந்தம்*
*சட்டப்படி பார்க்கப் போனால்*
*எட்டடிதான் சொந்தம்!*

என்னும் பாட்டை எழுதி கலைமான கையில கொடுத்துவிட்டு போயவிட்டார் அதை அப்போது அங்கே மியூசிக் டைரக்டராக இருந்த எம எஸ் விஸ்வநாதனிடம கொடுக்க அதைப் படித்த எம எஸ் வி. உடனே பாடலாசிரியரைத் தேடிப் பிடித்து டி ஆர் சுந்தரம முன் நிறுத்தினார்

டி ஆர் சுந்தரம ரிகர்சல ஹாலில உள்ள பரந்த வெளியில் தனியாக ஒரு நாறகாலியில் அமர்ந்திருப்பார் மாலை வேளையில் அவர் ராஜாங்கம நடத்தும இடமும அதுதான் யார் வந்தாலும் அவர் எதிரில் நின்று கொண்டுதான், சொல்ல வேண்டியதைச் சொலல வேண்டும்

எம எஸ் விஸ்வநாதன பட்டுக் கோட்டையாரை அழைத்துப் போய

டி ஆர் சுந்தரத்தின் முன நிறுத்தி விட்டுப போயவிட்டார் நாற்காலியில் டி ஆர் சுந்தரம அமர்ந்திருந்தார் உட்கார கவிஞருக்கு இடமிலலை ஒரு காகிதத்தை எடுத்தார் அதில் ஏதோ எழுதி டி ஆர் சுந்தரத்திடம் கொடுக்க அடுத்த நிமிடமே அங்கே பட்டுக் கோட்டையாருக்கு ஒரு நாற்காலி போடபபட்டது

வந்திருக்கும் நபர் மதிக்கத் தக்கவர் என்பதை டி ஆர் சுந்தரம் புரிந்து கொண்டார் அந்தத் துண்டு காகிதத்தில கவிஞர் எழுதிக் கொடுத்த வாக்கியம 'மரியாதை கொடுத்து மரியாதை பெறவும என்பது தான மதிக்கத் வேண்டியவர்களை மதிக்கத் தெரிந்தவர் டி ஆர் சுந்தரம என்பதறகு இது உதாரணம

பாசவலை படத்தின பாடல்கள எபபடி வரவேற்பு பெற்றன எனபதை சொல்லத் தேவையே இலலை

நடிகர்களை போல சில பாடகர்களும் நிரந்தரமாகவே ரிகர்சல் ஹாலில் தங்கி இருந்தனர் அவர்களுக்கும் அபபோது மாத சமபளம் கொடுக்கபபட்டது அதில் முக்கியமானவர்கள் சீர்காழி கோவிந்தராஜன டி எம சவுந்திரராஜன் ஏ எல ராகவன மறறும் எஸ் சி கிருஷ்ணன வேலையில்லாத நேரங்களில இவர்கள பாட்டுக்காக 'சாதகம' செயவது வழக்கம

கழுத்தளவு தண்ணீரில நின்று சாதகம் செயதால் குரல வளம நன்றாக இருக்கும எனபர்

இதில் சீர்காழிக்கு தினமும் சாதகம் செய்தே ஆக வேண்டும

தைரியமாக டி ஆர் சுந்தரத்தை அணுகி, "தனக்கும். மற்றவர்களுக்கும் சாதகம் செய்ய தண்ணீர் தேவை என்று மொட்டையாகச் சொன்னார்

'என்ன வேண்டும் என்பதைத் தெளிவாகச் சொல என்றார் டி.ஆர் சுந்தரம சிரித்துக் கொண்டே

சாதகம செய்ய நீர் நிறைந்த ஒரு பெரிய தொட்டி வேண்டும என்பதை அவரும் விளக்கினார்

ரிகர்சல் ஹாலில் ஒரு மூலையில் ஆறு அடி நீளமும் நான்கடி அகலமும் மூன்றடி உயரமும் கொண்ட ஒரு தொட்டி மூன்றே நாளில் கட்டப்பட்டது அதில் நிறைய தண்ணீர் நிரப்பிவிட பாடகர்கள் கழுத்தளவுக்கு தண்ணீர் வரும வரை அதில உட்கார்ந்து சாதகம செய்தனர் இது அவர்களுக்கு டி.ஆர் சுந்தரம கொடுத்த எக்ஸ்ட்ரா போனஸ்

'சாதகம செய்ய வேண்டுமென்றால எங்காவது குளத்தைத் தேடு என்று, அவர் சொல்லவில்லை மாறாக தன ஸ்டுடியோவில தொழில செய்ய வந்தவர்களுக்கு வேண்டிய சவுகர்யங்களைச் செய்து கொடுக்க வேண்டும. அது தன கடமை என்று நினைத்தார் எம எஸ் விக்குப பின் வந்தவர் கே வி.மகாதேவன் அவர் மெட்டமைத்த பல படங்களின் பாடல்கள் மிகவும் பிரபலமடைந்தன

திராவிட மொழிகள் யாவற்றிலும் படம் எடுத்தாயிற்று மாடர்ன் தியேட்டர்சை பொறுத்தவரை இது ஒரு சாதனை ஆங்கிலத்திலும படம எடுத்தாயிற்று இந்திய மொழிகளில முக்கிய மொழியான இந்தியை மட்டும ஏன் விட்டு வைக்க வேண்டும என டி ஆர் சுந்தரம முடிவு செய்தார் இந்தியில படம் எடுக்க வேண்டும என்று அவர் அஸ்திவாரம போட்டுக் கொடுக்க. மீதி வேலைகள் அசுர வேகத்தில் நடந்தன

இந்தி நடிகர்கள் டைரக்டர் எல்லாரையும் சேலத்திற்கு வரவழைத்து விட்டார்

செவன் பிரைட்ஸ் டார் செவன பிரதர்ஸ் எனும் ஆங்கிலக் கதை தேர்ந்தெடுக்கப்பட்டது இந்தி மார்க்கெட்டுக்கு தேவையான மசாலாக்களை சேர்த்து கதை செய்திருந்தார் ஐ எஸ் ஜோகர் எனும காமெடி நடிகர்

கதாநாயகனாக அஜீத் என்ற நடிகரும் கதாநாயகியாக நளினி ஜெயவந்தும நடித்தனர் துணை நடிகர்கள் உட்பட எல்லாரும பமபாய இறக்குமதி தான படத்தை டைரக்ட செய்தவரும ஐ எஸ் ஜோகர் தான் பெரும வெற்றியை எதிர்பார்த்த இந்தப படம மிகவும சுமாராகத் தான் போயிற்று படப்பிடிப்பு சமயத்தில் இந்தி நடிகர்கள் கொடுத்த தொல்லைகளை டி ஆர் சுந்தரத்தின் கவனத்திற்கு கொண்டு போகாமல், சமாளித்து விட்டனர் அங்கிருந்த தொழிலாளர்கள்

படம வெற்றி அடையவில்லை அதனால் தொடர்ந்து இந்திப்படம எடுக்கும யோசனையை தள்ளி வைத்து தமிழ படம் தயாரிப்பதில் கவனம செலுத்த ஆரமபித்தார் டி ஆர் சுந்தரம. 1957ம ஆண்டில், இந்தி படம எடுத்த பின அடுத்ததாக மாடர்ன

தியேட்டர்ஸ் தயாரிக்க எடுத்துக் கொண்ட படம் ஆரவல்லி
இந்தப்படம் ஏற்கனவே, 1946ல் பி எஸ் சிவபாக்கியம் என்னும் நடிகை நடித்து மாடர்ன் தியேட்டர்சாரே தயாரித்த படம்!
அதே படத்தை மீண்டும் வேறு ஒரு பிரபல நடிகையை வைத்து, எடுக்க விரும்பினார் டி ஆர் சுந்தரம் அந்த நடிகை தான ஜி வரலட்சுமி அப்போது தெலுங்கு பட உலகில பிரபலமாக இருந்த நடிகை வரலட்சுமி ஆரவல்லியாக நடிக்க அவரது மகளாக மைனாவதி நடித்தார் பழங்கால சரித்திரத்தில கிளியோபாட்ரோ கழுதை பாலில குளிப்பதாக சொல்லப்பட்டு இருந்தது அதே போல் ஆரவல்லி கழுதை பாலில் குளிப்பது போல் காட்சியை அமைக்க வேண்டும் என்று நினைத்தார் டி ஆர் சுந்தரம் சுற்றுப்புறமுள்ள கிராமங்களில் இருந்த சலவைத் தொழிலாளிகளை ஒன்று சேர்த்து அவர்களது ஒத்துழைப்புடன் நூறு கழுதைகளை தயார் செய்தார் சலவைத் தொழிலாளிகள் கழுதைகளிடம் பால கறப்பது போல லாங் ஷாட்டில படமாக்கப்பட்டது அதையே குளோசப ஷாட்டில் காண்பிக்கும் போது, காமெடியனகள கழுதைகளிடம் பால் கறப்பது போலக் காண்பிக்கப்பட்டது ஏறக்குறைய, எல்லா காமெடியனகளும் சற்று பயத்துடன் இந்த காட்சியில் நடித்தனர் கழுதை உதைத்தால் என்னாகும என்று அவர்களுக்கு தெரியாதா பால் கறக்கும் காட்சிக்காக பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் ஒரு அருமையான பாட்டை எழுதியிருந் தார் அது

# முதலாளி (12)

ஆரவல்லி படத்திற்காக பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் எழுதிய பாடல் பழக்கம் இல்லாத கழுதைக்கிட்டே, கொஞ்சம் பாத்து கறக்கணும் ஏன்னா எப்ப பல்லு போகுமோ மூக்கு போகுமோ சொல்ல முடியாது அதனாலே பாத்து கறக்கணும் என்று ஆரம்பிக்கும் படத்தை டி ஆர் சுந்தரம் டைரக்ட் செய்தார் கறுப்பு வெள்ளையில் எடுத்த இந்தப் படத்தின் படப் பிடிப்பு மிகவும் அற்புதமாக இருந்தது என்று, எல்லாரும் அப்போது பாராட்டினர் பாராட்டுக்குரியவர், கேப்டன் ஜி ஆர் நாதன்



மாடர்ன் தியேட்டர்சில், பெரிய நடிகர்களை போட்டு எடுத்த பிரம்மாண்டமான படம் தலை கொடுத்தான் தம்பி இதற்கு, வசனம் எழுதத்தான் மாடர்ன் தியேட்டர்சுக்கு வந்தார் முரசொலி மாறன் நடிகர்கள் கே ஆர் ராமசாமியும், எஸ்.எஸ் ராஜேந்திரனும் இணைந்து நடித்த கதை இது இது ஒரு கிராமியக் கதையின் சாயலைக் கொண்ட இரு சகோதரர்களின் கதை ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளாமலேயே இருவரும் சிறையில் வாடுகின்றனர் பின் அங்கிருந்து தப்பிக்கும் காட்சிகள் பிரமாண்டமாக எடுக்கப் பட்டன இந்தியாவிலேயே மிகப் பெரிய மாக்னசைட் சுரங்கம் உள்ள இடம் சேலம் அங்கு 200 சதுர அடி ஆழம் வரை தோண்டப் பட்ட பின், நீண்ட படிக்கட்டுகள் அமைக்கப்பட்டு அந்தப் படிக்கட்டுகளில் ஆயிரம் கைதிகள் வரிசைக்கு 50 பேர் நிறுத்தப்பட்டு இருந்தனர் சுற்றிலும் கண்களுக்கு எட்டிய தூரம் வரை கைதிகள் வேலை செய்வது போல் காட்சி அமைக்கப்பட்டது கே ஆர் ராமசாமியும் எஸ் எஸ் ராஜேந்திரனும் ஒரு இடத்தில் வேலை செய்வது தான் சீன் அங்கிருந்து அவர்கள் தப்பி ஓட வேண்டும்

கைதிகள் வேலை செய்யும் இடத்திற்கு போய் அவர்களுக்கு தண்ணீர் கொடுக்க ஆட்கள் தேவை என்பதால் ஒவ்வொரு வரிசைக்கும் ஒரு டிரம் வைத்து அதில் தண்ணீர் நிரப்பி

இருந்தனர் அதிகாலையில் ஆட்கள் ஸ்பாட்டிற்கு வர ஆரம்பித்தால் எல்லாவற்றையும் ஒழுங்காக அமைக்க காலை ஒன்பது மணி ஆகி விடும். படப்பிடிப்பு முடிய, மதியம் ஒரு மணி ஆகிவிடும். அதற்கு மேல் தாங்க முடியாத அளவுக்கு வெயில் இருக்கும் என்பதால் முற்பகலோடு படப்பிடிப்பு நிறுத்தப்படும். இதை போன்று "மாக்னசைட் மைனசில பத்து தினங்கள் படப்பிடிப்பு நடந்த பின், சிறையிலிருந்து சகோதரர்கள் தப்புவது போல் காட்சி அமைக்கப்பட்டது. டி ஆர் சுந்தரம் டைரக்ஷனில் இதுவும் ஒரு வெற்றி படம் தான்.

தலை கொடுத்தான் தம்பி படத்துக்காக, மாக்னசைட் சுரங்கத்தில் அவுட்டோர் படப்பிடிப்பு நடந்த பின். இன்னும் சில வெளிப்புற காட்சிகள் எடுப்பதற்காக கன்னியாகுமரி, சுசீந்திரம் திருவனந்தபுரம் போன்ற இடங்களை தேர்ந்தெடுத்தார் டி.ஆர் சுந்தரம். நடிகர்கள் கே ஆர் ராமசாமி. எஸ் எஸ் ராஜேந்திரன் மற்றும் மற்ற துணை நடிகர்கள் தொழில் கலைஞர்கள் உட்பட, பெரிய பட்டாளமே அந்தப் பகுதிக்கு போயிருந்தது. கேமராமேன் மஸ்தான் ஆர்ட் டைரக்டர் டோமினிக் எல்லாம் இதில் அடக்கம்.

திருவனந்தபுரத்தில் இருந்த மெர்ரிலேண்ட் ஸ்டுடியோ கெஸ்ட் அவுசில் டி ஆர் சுந்தரம் தங்கி இருந்தார். திட்டமிட்டபடி, படப்பிடிப்பு ஒழுங்காக முடிந்து விட்டது. கலைஞர்கள் எல்லாரும் பத்திரமாக திருப்பி அனுப்பப்பட்டு விட்டனர். டத்துக்கும் மேற்பட்ட தொழில் நுட்பக் கலைஞர்களும் டி ஆர் சுந்தரமும் மட்டும் தான் எஞ்சி இருந்தனர். பணம் எல்லாம் தீர்ந்து விட்ட ரயில் டிக்கெட் வாங்க பணம் இல்லை. இதை டி ஆர் சுந்தரத்திடம் போய் சொல்ல "சேலத்திற்கு போன் போட்டு பணம் அனுப்பச் சொல்!" என்று உத்தரவு போட்டு விட்டார். எப்படியும் வந்து சேர இரண்டு தினங்களாவது ஆகும். ஸ்டுடியோவிற்குள் இவர்கள் நின்று பேசிக் கொண்டு இருந்தபோது அங்கே பிரேம் நசீர் தன் மனைவி மற்றும் குழந்தைகளுடன் ஸ்டுடியோவில் படம் பார்க்க வந்தார். அவர் தான் மாடர்ன் தியேட்டர்சின் வண்ணக்கிளியில் கதாநாயகனாக நடித்தவராயிற்றே. காஸ்டியூமர் அர்த்தனாரிக்கு திடீரென ஒரு யோசனை தோன்ற அவரை நிறுத்தி தங்கள் நிலையை சொல்லி ஊருக்கு போனவுடன் பணம் அனுப்புவதாகவும் இப்போது ரயில் செலவுக்கு இரண்டாயிரம் ரூபாய் தேவை என்றும் சொன்னார். தொழில் நுட்ப கலைஞர்கள் அருகில் தான் இருந்தனர். எல்லாம் கேட்டு விட்டு, அந்த நடிகர் "என்னை யாரென்று நினைத்து கொண்டு பேசுகிறீர்கள்?" என்று ஒரு குண்டை தூக்கி போட்டார். எல்லாருக்கும் அதிர்ச்சி

'ஏன் நீங்கள் எங்கள் படத்தின் ஹீரோ பிரேம்நசீர் தானே!'

'இல்லை நான் அவர் தம்பி பிரேம் நவாஸ் என்றார் சிரித்துக் கொண்டே.

அச்சு அசலாக, தன் அண்ணனைப் போலவே இருந்தார்

எல்லாரும் அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள் அவரே பேசினார்

'அரை மணி நேரம் டைம் கொடுங்கள் வீட்டிற்கு போய் பணம் எடுத்து வருகிறேன் என்று சொல்லிவிட்டு போனவர் விரைவில் பணத்துடன் வந்தார்

'எங்கள் டைரக்டரை சந்திக்கிறீர்களா? என்று கேட்டதற்கு "வேண்டாம் எனக்கு அதிக அறிமுகமில்லை..' என்று சொல்லி போய் விட்டார்
கதாநாயகன் என்றாலே தனக்கு தனி அந்தஸ்து வந்துவிட்டதென்றும் அதனால் தான் சொன்ன படி தான் எல்லாரும் கேட்டாக வேண்டும் என்று நினைத்த ஒரு கதாநாயகனுக்கு ஏற்பட்ட கதி என்னவென்று பார்ப்போமா?
ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணி என்னும் வெற்றிப்படத்தை தெலுங்கில் எடுக்க முடிவு செய்த டி ஆர்.சுந்தரம் அதற் காக தெலுங்கில அப்போது மிகவும் பிரபலமாக இருந்த நடிக, நடிகையரை இந்த படத்திற்காக ஏற்பாடு செய்தார்
ஜக்கையா மற்றும் ராஜநளா பிரபாகர் ரெட்டி, ரேலங்கி அல்லூரி ராம லிங்கையா ரமண ரெட்டி, ஜமுனா கிரிஜா ஆகிய முக்கிய நட்சத்திரங்கள் இந்த படத்தில் இருந்தனர் படத்தின் பெயர் சஹஸ்ர சிரச்சேத அபூர்வ சிந்தாமணி என்பதாகும். தமிழில பி.எஸ கோவிந்தன் நடித்த கதாநாயகன் பாத்திரத்திற்கு தெலுங்கில ஜக்கையா ஒப்பந்தம் செய்யப்பட்டு இருந்தார் சிந்தாமணி படத்தின முக்கிய பகுதியே, "இந்த மூன்று கேள்விகள் தான அந்தக் கேள்விகளுக்கு பதில சொல்லவில்லையென்றால் அவர்களது தலை துண்டிக்கப்பட்டுவிடும். 999 அரச குமாரர்கள் சிந்தாமணியிடம் வந்து தங்களது தலையை இழந்தனர் ஆயிரமாவது நபராக வருபவர் தான் கதாநாயகன' அவர் பல நாடுகளில் அலைந்து முதல இரண்டு கேள்விகளுக்கு விடை தெரிந்து கொண்டு வருகிறார் அடுத்ததாக வரும நாட்டின் அரசர், கதாநாயகனின தந்தைக்கு மிகவும் நெருங்கிய நண்பர் ஆனால அந்தக் கேள்வியை கேட்ட உடன, கதாநாயகனை அந்த அரசன அடித்து போட்டு விடுகிறார் கேள்வியை கேட்கும வரை அன்பாக இருந்த அரசனின் குணம், ஏன் இப்படி மாறியது என்பது கதாநாயகனுக்கும் புரியாத விஷயம் அடித்தபின் மீண்டும சகஜநிலைக்கு திரும்பிய அரசன் கதாநாயகனை சமாதானபபடுத்துகிறான் தைரியமாக கதாநாயகன தொடர்ந்து அதே கேள்வியை கேட்க அரசன இந்த முறை அடிக்காமல மிகவும சோகமாகி விடுகிறான "சந்நியாசிக்கு உதவிய சுதாவும், ஆகாத மதியும உயிருடன் இருக்கின்றனரா அல்லது இறந்துவிட்டனரா! அல்லது சுதா மதி கதி என்ன?'என்பது தான் கேள்வி.
பதில் வாங்காமல அந்த இடத்தை விட்டு போவதில்லை என்று முடிவு செய்த கதாநாயகனின் தொந்தரவை பொறுக்க முடியாமல் அரசன் அந்தகேள்விக்கு பதில் "தான் தான்' என்று சொல்ல கதாநாயகன் அதிர்ச்சி அடைகிறான்
இதுதான் படமாக்கபபட வேண்டிய காட்சி. கதையில் ஹீரோவான ஜக்கையா அரசனிடம் அடி வாங்க வேண்டும ஆனால் ஜக்கையா அடி வாங்க மறுத்து விட்டார் இதற்கு, அவர் சொன்ன ஒரே காரணம "நான அரசனிடம அடி வாங்குவது போல காட்சி அமைத்தால ஆந்திராவில் என் ஹீரோ, 'இமேஜ் கெட்டுவிடும அதற்கு பின்னால என்னை யாரும மதிக்க மாட்டார் கள் எனக்கு அதுதான முக்கியம இந்தப்படம முக்கிய மலல

வேண்டுமானால அட வான்சை திருபபிக் கொடுத்து விடுகிறேன் என்று சொல்லி விட்டார் அபபோது டி ஆர் சுந்தரம் ஊரில் இல்லை சென்னையில் ஏதோ வேலையை கவனிக்கப் போயிருந்தார் ஸ்டுடியோ நிர்வாகிகள் யார் சொன்னதையும் ஐக்கையா கேட கத் தயாராக இலலை சென்னைக்கே திருமபிப போகத் தயாராகி விட டார் படமோ பாதியாகி விட டது இபபோது கதாநாயகன போவதெனறால

பட த்தில எஸ் எஸ லால மற்றும எஸ் டி லால என்று இருவர் டைரக்டராகவும கேமரா மேனகளாகவும வேலை செயதனர் இதை டி ஆர் சுந்தரத்திட ம சொலலி அவரது யோசனையை கேட பது நல்லது என்று சென்னைக்குப போன் செய்தனர்

'நான் ஒரு மணி நேரம் கழித்து, உங்களுக்கு போன் செயகிறேன் அதுவரை பட பபிடிபபை நிறுத்தாதீர்கள் ஐக்கையா இல்லாத காட சிகளை எடுங்கள் என்று சென்னையில் இருந்து சொல்லிவிட டார் டி ஆர் சுந்தாம இந்தச் சம்பவம நடக்கும போது காலை, 10:00 மணி சரியாக 12 00 மணிக்கு "டி ஆர் சுந்தரம திருமபவும போன செய்து ஐக்கையாவின விருபபபடி அவரை சென்னைக்கே திருபபி அனுபபி விடுஙகள நாளை காலை நான் புதிய கதாநாயகனுட ன வருகிறேன என்று சொலலி விட டார் படம்பாதி முடிந்த நிலையில் கதாநாயகன் சென்னைக்கு ரயிலேற்றி விடபபட்டார்

## முதலாளி. (13)

ஆயிரம் தலை வாங்கிட ஆபூர்வ சிந்தாமணி தெலுங்கு படத்திலிருந்து நடிகர் ஜக்கையா விலகி கொண்டதைத் தொடர்ந்து புதிய கதாநாயகனாக நடிகர் காந்தாராவை அழைத்துக் கொண்டு வந்து விட்டார் டி ஆர் சுந்தரம் அவரும். அப்போது தெலுங்கில நல்ல மார்க்கெட உள்ள நடிகர் தான ஜக்கையா நடித்த காட்சிகள் அப்புறப்படுத்தப் பட்டன போட்ட செட்டுகள் மீண்டும் போடப்பட்டு காந்தாராவிற்கு புதிய உடைகள் தைக்கப்பட்டு 15 தினங்களில காந்தாராவை நடிக்க வைத்து படத்தை முடித்து விட்டார் 1947ல எடுத்த தமிழ்படம் 1960ல தெலுங்கிலும எடுக்கப்பட்டது அதே படத்தை கன்னடத்திலும "டப்" செய்து வெளியிட்டனர் இந்த இரண்டு படங்கள மாபெரும வெற்றி பெற்றன இடையில் ஒரு முக்கியமான செய்தி. மைசூர் நகரத்தைச் சுற்றியுள்ள காடுகளில யானைகள அதிகம் அங்கு இருந்த ஒரு கிராமத்தில மக்களை வீட்டிற்குள இருந்து வெளியே வர விடாமல் பயமுறுத்திக் கொண்டு இருந்தது ஒரு காட்டு யானை யானைக்கு மதம் பிடித்து விட்டது என்று கூறினர்



மனிதர்களைப் பார்த்தால ஓட ஓட விரட்டும தன்மை கொண்டதாக அது இருந்தது. சிறந்த வேட்டைக்காரர்களால் கூட அந்த யானையை அடக்க முடியவில்லை
இதனால மைசூர் மகாராஜா அரசிடம் விண்ணப்பிக்க, அவர்களோ கேரளம, கர்நாடகம மற்றும் தமிழகத்தில் உள்ள துப்பாக்கிப் பயிற்சி பெற்ற வேட்டைக்காரர்களுக்குத் தகவல அனுப்பினர் யானையை சுட்டுத் தள்ள வந்தவர்கள் நான்கு பேர் அதில் ஒருவர் டி ஆர் சுந்தரம அவர் பல ஆண்டுகளுக்கு முன துப்பாக்கி லைசன்ஸ் பெற்று அவ்வப்போது வேட்டைக்கு செல்லும பழக்கமுடையவராக இருந்தார் யார் கண்களிலும அகப்படாத யானை டி ஆர் சுந்தரம கண்களில் படவே அதை அவர் சுட்டு வீழ்த்தினார் கிராம மக்களுக்கு மிகவும மகிழச்சி டி ஆர் சுந்தரத்திற்கு பெரும அளவில பாராட்டுத் தெரிவித்து ஊருக்கு அனுப்பி வைத்தனர் அரசும் டி ஆர் சுந்தரத்திற்கு பாராட்டு தெரிவித்தது, அவார்டும தரப்பட்டது அட்டகாசம செய்த யானையை சுட்டுக்கொன்றாலும. விநாயகர் மீது அவருக்கு அளவு கடந்த பக்தி ஸ்டுடியோவின முன்புறத்தில் வாயிலினுள் நுழையும் முன்பே ஒரு விநாயகர் கோவில் இருக்கிறது

இங்கே கற்பூரம் காட்டிய பின் தான் உள்ளே படத்திற்கான பூஜை நடக்கும் இந்த விநாயகர் விஷயமாக ஒரு முக்கிய செய்தியைச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆரவல்லிப் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த சமயம் டி ஆர் சுந்தரத்திற்கு உதவியாக இருந்தவர் கோ தா சண்முக சுந்தரம் எனும் மேதாவி ஒரு காட்சியில் ஆரவல்லியை வெல்வதற்காக பீமன் தன் நண்பனுடன் அந்த நகருக்கு வந்து ஒரு கோவிலில் படுத்திருக்கிறான் அப்போது அங்கே வந்த பொதுமக்களில் சிலர் ஆரவல்லியின் தீரத்தனத்தைப்பற்றிப் புகழ்ந்து "இவளை வெற்றி கொள்ள யாருமே வரமாட்டார்களா?" என்ற கேள்வியை எழுப்பினர் இதைக் கேட்டுக் கொண்டே எழுந்த பீமனுக்கு, அடங்காத கோபம் வருகிறது. "அவளை நான் வெற்றி கொண்டே தீருவேன் என்று சபதம் போட்டு அறைகூவல் விடுத்த பின் கையிலிருந்த கதையை பலமாக வீசுவான் அப்போது அருகில் இருந்த ஒரு விநாயகர் சிலை, கதை பட்டு உடைந்து விடுகிறது காட்சி நன்றாக அமைந்துவிட்டது என்று எல்லாருக்கும் திருப்தி

படம் முடிவடைந்த பிறகு அதைச் சிலருக்குப் போட்டுக் காட்டுவது ஸ்டுடியோவின் வாடிக்கைகளில் ஒன்று ஸ்டுடியோ தொழிலாளர்கள் உட்பட சில வெளியுலக பிரபலங்களும் அங்கே அழைக்கப்படுவது உண்டு இவர்களில் சில முக்கிய நபர்கள் தங்களது விமர்சனத்தைக் எழுதிக் கொடுப்பர் ஆரவல்லி படம் பார்த்த குழுவினருள் இருந்து ஒரு முக்கிய நபர் எழுதிய விமர்சனம் டி ஆர் சுந்தரத்தின் கவனத்திற்குக் கொண்டு போகப்பட்டது அதை அவர் படித்துப் பார்த்தார் "ஈ வெ ரா விநாயகர் சிலைகளை உடைத்துக் கொண்டு வரும் இந்தக் காலகட்டத்தில் பீமனின் கதைபட்டு ஒரு விநாயகர் சிலை உடைவது ஈ வெ.ரா வின் கொள்கைக்கு வலு சேர்ப்பதாக உள்ளது அதனால் இப்படிப்பட்ட ஒரு காட்சி தேவை இல்லை என்பது என் கருத்து. ஏனெனில் மக்களின் விமர்சனத்திற்கு நிச்சயம் இது தப்பாது பீமன் தன் கதையை வீசுவதோடு நிறுத்திக் கொண்டால் போதும் என்று எழுதியிருந்தார் அவர் டி ஆர் சுந்தரத்திற்கும் இது சரி என்றே பட்டது அந்தக் காட்சியை மட்டும் படத்திலிருந்து வெட்டி விடச் சொன்னார் ஆனால் டி ஆர் சுந்தரத்தின் உதவியாளராக இருந்த நபருக்கு அதை நீக்க விருப்பமில்லை பிடிவாதமாக விவாதித்தார் பயன் இல்லை அதனால் அந்த நபர் தன் உத்தியோகத்தை ராஜினாமா செய்ய போவதாக அறிவித்து வெளியேறி விட்டார்

அப்படிப் போனவர் "மேதாவி என்று அழைக்கப்பட்ட நாவலாசிரியர் கோ தா சண்முகசுந்தரம் இந்த விமர்சனத்தை எழுதிக் கொடுத்தது எழுத்தாளர் மகரிஷி நல்ல விஷயத்தை யார் சொன்னாலும் சொல்லும் மனிதனின் தராதரத்தைப் பார்க்காமல் ஏற்றுக் கொள்ளும் பரந்த மனப்பான்மை டி.ஆர் சுந்தரத்திடம் இருந்தது.

ஆரவல்லி படத்துக்குப் பின், டி ஆர் சுந்தரம் டைரக்ட் செய்த படம், கைதி கண்ணாயிரம் இந்தக் கதை தேர்ந்தெடுக்கப்பட்டதே எதிர்பாராத விதமாகத்தான் ஆங்கில இந்திப் படங்களைப் பார்க்கும் மாடர்ன் தியேட்டர்ஸ் கதை இலாகாவினர் ஒரு படத்தை சிறந்தது என்று ஏகோபித்துச் சொன்னால், அந்தப் படத்தை ஸ்டுடியோவிற்கு வரவழைத்துப் பார்ப்பார் ஆர் சுந்தரம் கதை பிடித்து இருந்தால் அதன் உரிமையை வாங்கி தமிழ் மக்களுக்குப் பிடிக்கும் வகையில் சில 'செண்டிமெண்டுகளை சேர்த்துத் திரைக்கதையை அமைப்பதில் டி ஆர் சுந்தரம் தேர்ச்சி பெற்று இருந்தார் கதை இலாகாவில் இருந்த எல்லாருக்கும் அவரது விருப்பம் என்னவென்பது தெரியும் சில சமயங்களில்

எத்தனையோ படங்களைப் பார்த்தாலும் ஒரு படம் கூடத் தேறாது. அதற்காகப் படப்பிடிப்பில் தொய்வும் ஏற்படுவதில்லை. ஏதாவது ஒரு படத்தை 'டப்' செய்து, ரிலீஸ் செய்து விடுவார். அப்படித்தான் சிந்தாமணி படம் கன்னடத்தில் 'டப்' செய்யப்பட்டது. பலரின் முயற்சியால் ஒரு நல்ல இந்திப்படம் கிடைத்தது. அது: கைதி 911. ஷேக்முக்தார் என்ற உயரமான வில்லன் நடிகர், நடித்து வெற்றி கண்ட படம்.

இதற்குத் திரைக்கதை எழுதிய பின் கைதி கண்ணாயிரம் என்னும் பெயரைச் சூட்டினர். இந்தக் கதைக்காக அவர் தேர்ந்தெடுத்த நடிக நடிகையரின் பட்டியல் பெரியது. பி.எஸ். வீரப்பா, ஆர்.எஸ். மனோகர், ஜாவர் சீதாராமன், கே.ஏ. தங்கவேலு, ராஜசுலோசனா, ஈ.வி. சரோஜா மற்றும் மனோரமா ஆகியோர் நடித்தனர். படத்தில், பிரதான வேடத்தில் நடித்த பி.எஸ். வீரப்பாவிற்கு மொட்டையடிக்க வேண்டும். தன் அடர்த்தியான முடியை இழக்க, அவர் சம்மதிப்பாரா?

யாரும் அவரிடம் கேட்கவே இல்லை. மேக்கப்மேன் பலராம நாயுடுவும், காஸ்ட்யூமர் அர்த்தனாரியும் சேர்ந்து வீரப்பாவின் தலைக்கேற்ற ஒரு 'விக்' தயாரித்தனர். அந்த 'விக்' அணிந்து கொண்டால் முடி சுத்தமாக மறைந்து மொட்டைத் தலையாகக் காட்சியளிக்கும். வீரப்பாவின் முடியும், சிரிப்பும் தான் அவருக்கு அந்த காலத்தில் புகழைக் கொடுத்தன. முடிக்கு மேல் அந்த மொட்டை 'விக்'கை ஒட்டுவது சிரமமான காரியம் என்றாலும், அதை விட சிரமமான காரியம் 'விக்' ஒட்டப்பட்ட தலையுடன் நடிப்பது. சினிமா உலகில் அப்போதுதான் இந்த மொட்டை 'விக்' கலாசாரம் அறிமுகமானது. பசை ஒரு பக்கம் முகத்தின் தசைகளை இழுக்க, அந்த வேதனையைப் பொறுத்துக் கொண்டு வீரப்பா நடிக்க வேண்டும். நன்றாகவே நடித்தார். தலையில் ஒட்டப்பட்டிருப்பது 'விக்' என்றே தெரியாமல் கேமராமேன் சி.ஏ. மணி காட்சிகளைப் படமாக்கினார். இந்தப்படத்திற்கு ஆர்ட் டைரக்டர் நாகராஜனும், ஸ்டண்ட் மாஸ்டர் ஜூடோ ரத்தினமும் கொடுத்த ஒத்துழைப்பை பாராட்டியே ஆகவேண்டும். இப்படத்தின் படப்பிடிப்பு நடக்கும்போது நடந்த ஒரு முக்கியமான விஷயத்தையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். உயரமான ஓர் இடத்தில் பி.எஸ். வீரப்பா, மனோகர் இருவருக்கும் நடக்கும் சண்டைக் காட்சி இரவு நேரத்தில் படமாக்கப்பட்டது. இந்தக் காட்சிக்கு சில 'ட்ரிக் ஷாட்'டுகள் தேவை. அவர்கள் பத்தடி உயரமுள்ள இடத்தில் நின்று சண்டை போட்டாலும், நான்கு மாடிக் கட்டடத்தின் மீது நின்று கொண்டு சண்டை போடுவது போல காட்சி அமையவேண்டும். இக்காட்சியைத் தெருவில் போவோர் வருவோர் நின்று அண்ணாந்து பார்க்க வேண்டும். இதற்காகத் துணை நடிகர்கள் ஆண்களும், பெண்களும் நூறு பேர் சேலத்திலிருந்து வரவழைக்கப்பட்டிருந்தனர். மனோகர், வீரப்பா, ஜாவர் சீதாராமன் போன்ற நடிகர்களும் வந்து விட்டனர். படப்பிடிப்பும் ஆரம்பமாகி விட்டது. படப்பிடிப்பு முடிய இரவு இரண்டு அல்லது மூன்று மணியாகும் என்று நினைத்து விட்ட கார், பஸ் டிரைவர்கள் 'தாகசாந்தி' செய்து கொண்டு படுத்து விட்டனர். ஆனால், எப்போதுமே அசுரகதியில் நடக்கும் படப்பிடிப்பு வேலை இரவு பன்னிரெண்டு மணிக்கே முடிந்து விட்டது. எல்லாரும் வீடு திரும்பத் தயாராகி விட்டனர். டிரைவர்களை உடனே வண்டிகளை எடுக்கச் சொல்லி டி.ஆர். சுந்தரம் உத்தரவிட்டார். போதையில் இருக்கும் அவர்கள் எப்படி எழுந்து வர முடியும்?

## முதலாளி (14)

கைதி கண்ணாயிரம் படத்தின் ஷூட்டிங் நடந்து முடிய நள்ளிரவு ஆகிவிடும் என்று கருதிய நடிகர் நடிகையருக்கு வாகனம் ஓட்டிய டிரைவர் கள் உறங்க சென்று விட்டனர் ஷூட்டிங் விரைவாகவே முடிந்து விட வாகனம் ஓட்ட ஆள் இல்லாமல தத்தளித்தனர் ஸ்டுடியோ நிர்வாகிகள்



"டிரைவர்களுக்கு நல்ல காய்ச்சல், அதனால, படுத்து விட்டனர் என்று சொல்லவும், டி ஆர் சுந்தரமும் அதை நம்பி தானே பஸ்சில டிரைவிங் சீட்டில் ஏறி அமர்ந்து இரண்டு "டிரிப்"பாக துணை நடிகர்களைச் சேலம கொண்டு போய் சேர்த்தார் இதற்குள் முதலாளியின் "சவர்லெட்" காரை எடுத்த அர்த்தநாரி, முக்கியமான நடிகர்களையும், டெக்னிஷியன்களையும் இரண்டு மூன்று 'டிரிப' அடித்து சேலம கொண்டு போய் சேர்த்துவிட்டு, மறுபடியும ஸ்டுடியோவிற்கு வந்து சேர்ந்தார் அப்போது மணி மூன்று. விடியற்காலை நேரம பஸ்சை ஓட்டிக் களைத்துப போன டி ஆர் சுந்தரம் ஸ்டுடியோவிற்கு பஸ்சிலேயே வந்துவிட்டார்

"டிரைவர்களை எழுப்பி பஸ்சை ரிகர்சல் ஹாலுக்கு கொண்டு போகச் சொல் என்றார் அர்த்தநாரியிடம ஒரு மாதிரியாக சுதாரித்துக் கொண்ட டிரைவர்கள் தங்கள் பட்டணத்திற்குத் தயாராயினர் அவர்கள் நிலை என்னவென்பதை அறிந்தும், பெருந்தன்மையாக நடவடிக்கை எடுப்பதை தவிர்த்தார் நியாயமாக அவர்கள அன்றே வீட்டிற்கு அனுப்பப்பட வேண்டிய வர்கள

டி ஆர் சுந்தரம். தன காரில் ஏறி அமர்ந்தவுடன காஸ்ட்யூமர் அர்த்தநாரியைப பார்த்து "நீ எப்படி போவாய?" என்று கேட்டார்

"எனக்கு மோட்டார் பைக் இருக்கிறது ." என்றார் அர்த்தநாரி

"இரவு நேரத்தில, பைக்கில் போக வேண்டாம் காரில் உட்கார் உன்னையும் கொண்டு போய் விடுகிறேன் என்று சிரித்துக் கொண்டே சொல்ல அர்த்தநாரி பேசாமல

வண்டியில் ஏறிக் கொண்டார்

இத்தனை ஆண்டுகளாக அர்த்தநாரியைப் பற்றி விசாரிக்காத டி ஆர் சுந்தரம் அன்று காரில் வரும் போது, சகல விஷயங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டு அர்த்தநாரிக்கு ஒரு வீடு வாங்கிக் கொடுத்தார் அவரது நான்கு புதல்வர்களும் படித்து பட்டம் பெறும் வரை ஆகும் கலலூரி செலவுகளையும் ஏற்றுக் கொண்டார் அர்த்தநாரிக்கு மட்டுமல்லாமல் எவ்வளவோ குடும்பங்களுக்கு அவர் உதவி செய்து இருக்கிறார்

முதன் முதலாக கேரளாவுக்கு மலையாளப் படமான பாலனை அளித்த மாடர்ன் தியேட்டர்ஸ் கேரளாவுக்கு முதல் கலர் படத்தையும் அளிக்க முடிவு செய்தது மாடர்ன் தியேட்டர்சில் அப்போது தயாரான இந்தப் படத்தை இயக்க கே எஸ் சேதுமாதவன் நியமிக்கப்பட்டாலும் டி ஆர் சுந்தரம் தான் முழுக்க முழுக்க இப்படத்தை இயக்க உதவி புரிந்து, தயாரிக்கவும் செய்தார் முத்தையா என்றொரு கேரள நடிகர் இதில் முக்கிய வேடம் ஏற்று நடித்தார் உடன் நடித்தவர்கள், பிரேம நசீர் மற்றும் அம்பிகா மலையாள வசனகர்த்தாவின் உதவியுடன் படம் எடுக்கப்பட்டது படத்தின் பெயர் கண்டம் பெச்ச கோட்டு என்பதாகும் ஒட்டு போட்ட கோட்டு என்பது அதன் தமிழ் அர்த்தம் "ஒரு ஏழைப் பெண்ணின் திருமணத்திற்கு பண உதவி செய்வதை விட மெக்காவுக்கு காசு சேர்த்துக் கொண்டு போய் வருவது, புண்ணியமான காரியம் அல்ல என்ற, கருத்தை வலியுறுத்திய படம் கேரளாவில் நன்றாக ஓடி, வசூலை அள்ளிக் குவித்தது.

கண்டம் பெச்ச கோட்டு படத்தின் முக்கிய பாத்திரமே, ஒட்டுகள் போட்ட கோட்டை அணிந்த அந்தக் கிழவன் தான் அதற்குத் தான் முத்தையா தேர்ந்தெடுக்கப்பட்டார் நடிப்பு அவரது பிரதான தொழில் அல்ல நடிகர் பிரேம நசீருக்கும் அவரது தம்பி பிரேம நவாசுக்கும் மேனேஜராக அவர் இருந்தார் அவ்வப்போது சின்ன, சின்ன வேடங்களில் நடிப்பது உண்டு

இந்த முதல் மலையாள கலர் படத்தில் நடிக்க நடிகர்களைத் தேடிக் கொண்டு இருந்த போது முத்தையாவைத் தான் ஸ்டுடியோவில் பலரும் சிபாரிசு செய்தனர் அதில் மிகவும் முக்கியமானவர்கள் கேமராமேனும், காஸ்டியூமரும் தான் டி ஆர் சுந்தரம் மேக்கப் டெஸ்ட் நடத்தி உடனே ஓ கே, சொல்லி விட்டார் இந்தப் படத்திற்குப் பின் தான், முத்தையா தமிழ்ப்படங்களில் ஒரு நல்ல குணச்சித்திர நடிகராகத் திகழ்ந்தார் இப்படத்திற்குப் பின் டி ஆர் சுந்தரம் ஒரு முக்கிய முடிவை எடுத்தார் தனக்குப் பின், ஸ்டுடியோவை நிர்வகிக்க ஒரு நபர் தேவை மகன் ராமசுந்தரம் அப்போது கல்லூரிப் படிப்பை முடித்திருக்கவில்லை அதனால், நிர்வாகத்தைச் சேர்ந்த இதர இயக்குனர்களைக் கலந்து, அவரது சகோதரர் வி வி சி ஆர் வையாபுரியின் மகன் ஆர் வி சொக்கலிங்கத்தை எம் டி ஆக நியமித்தார் இதுவரை இவர் ஸ்டுடியோ பக்கமே தலைவைத்துப் படுக்காதவர் ஆர் கே பாலு ஆபிஸ் நிர்வாகத்தையும் ஆர் கே சித்தையன் ஸ்டுடியோ நிர்வாகத்தையும் திருப்தியாக கவனித்துக் கொண்டு வந்தனர் இன்னொரு

சகோதரர் மகனையும் இத்துறையில் தயார் செய்து விட வேண்டும் என்ற எண்ணத்தின் விளைவுதான் சொக்கலிங்கத்தின் நியமனம். சொக்கலிங்கம் நிர்வாகத்திற்கு வந்த பின் முதன்முதலாகத் தயாரிக்க எடுத்துக் கொண்ட படம் குமுதம்.

கதை வசனம் எழுதியவர் கே எஸ் கோபால கிருஷ்ணன். டைரக்டர் ஆதுர்த்தி சுப்பாராவ். இசை கே வி மகாதேவன். கதை வசனம் இசை மூன்றும் பிரமாதமாக அமைந்து விட்டதால் படம் வெற்றிப் படமாக அமைந்து விட்டது. வசூலில் சக்கை போடு போட்டது. புதிய நிர்வாகத்தின் கீழ் வெளிவந்த முதல் படம் என்றாலும் டி ஆர் சுந்தரத்தின் மேற்பார்வையில் தான் படத்தயாரிப்பு நடந்தது. அதுதான் உண்மை. ஸ்டுடியோவைப் பொறுத்தவரை, புரொடக்‌ஷன் ஆபிசைப் பொறுத்த வரை டி ஆர் சுந்தரத்தின் கண்காணிப்பு இருந்து கொண்டு தான் இருந்தது. அதே ஆண்டு, மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரிப்புக்கு எடுத்துக் கொண்ட படம் காட்டு ரோஜா. நிர்வாகப் பொறுப்பில் இருந்த சொக்கலிங்கம், அந்த சமயத்தில் மிகப் பிரபலமாக இருந்த ஒரு நடிகையை, ஒப்பந்தம் செய்து கொண்டு வந்துவிட்டார். அந்த நடிகை போட்ட கண்டிஷன்கள் இதுவரை மாடர்ன் தியேட்டர்ஸ் சரித்திரத்திலேயே இல்லாதது. சேலத்தில் தங்குவதற்கு ஒரு பெரிய பங்களாவும் பயணம் செய்ய இரண்டு "பிளைமூத்" கார்களும் வேண்டும். தினசரி தேவைக்காக ஒரு பசுமாடும் எருமை மாடும் வீட்டின் பின்புறம் கட்டப்பட்டு அங்கிருந்துதான் பால் பங்களாவிற்கு வர வேண்டும். இந்த சவுகரியங்கள் தவிர தனக்கு சொந்த மேக்கப்மேன், சொந்த காஸ்டியூமர் தான் தேவை. அவர்களுக்கு ஸ்டுடியோ தான் பணம் தர வேண்டும் என்று கண்டிஷன் போட்டார். மேலும் படத்தில் நடிக்க அவர் கேட்ட தொகை மிகவும் அதிகமானது. சொக்கலிங்கம் ஒப்பந்தம் செய்து கொண்டு வந்த விவரங்களை கேட்டு அதிசயம் அடைந்த டி ஆர் சுந்தரம், "மார்க்கெட் உள்ள நடிகை கேட்பது சரிதான்" என்று ஒப்புக் கொண்டாலும் இரண்டு விஷயங்களை அவர் விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லை. மேக்கப், காஸ்டியூம் இவை இரண்டும் ஸ்டுடியோவில் தான் நடக்கும் என்று, பிடிவாதமாகச் சொல்லி விட்டார். நடிகை அதற்கு ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. அதனால் கான்ட்ராக்ட் கேன்சல் ஆகி விட்டது. அதற்குப் பின் அந்த நடிகை மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோவில் நடிக்க வரவில்லை. இதேபோல ஒரு சம்பவம் எம் ஆர் ராதா விஷயத்திலும் நடந்தது. அவருக்கு சொந்த மேக்கப்மேன் ஒருவர் இருந்தார். அவர்தான் கஜபதி. தன் மேக்கப்மேன் தான் தனக்கு ஒப்பனை செய்ய வேண்டும் என்று ராதா பிடிவாதமாக இருந்தார். "நீ வேண்டுமானால் உன் பணத்தில் அவனுக்குச் சம்பளம் கொடுத்துவிடு. அதற்காக உன் ஊதியத் தொகையில் கொஞ்சம் சேர்த்துக் கொடுத்து விடுகிறேன். ஸ்டுடியோவிலிருந்து அவனுக்கு ஊதியம் கிடைக்காது." என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். தன் மேக்கப் மேன், காஸ்டியூமர்கள் மீது டி ஆர் சுந்தரத்துக்கு அப்படியொரு அபார நம்பிக்கை.

# முதலாளி. (15)

காட்டு ரோஜா படத்திற்கு முதலில் புக் செய்யப்பட்ட, அப்போது பிரபலமாக இருந்த ஒரு நடிகை போட்ட கண்டிஷன்களை டி ஆர் சுந்தரம் ஏற்றுக் கொள்ளாமல் அவரை திருப்பி அனுப்பி விட்டார் நீண்ட நாள் மாடர்ன் தியேட்டர்சுக்கு வராமலேயே இருந்த நடிகை பத்மினியை காட்டுரோஜா படத்திற்கு ஒப்பந்தம் செய்தார் டி ஆர் சுந்தரம் இந்தப் படத்தில் எஸ் எஸ் ஆர் மனோகர் எம் ஆர் ராதா முத்தையா புஷ்ப மாலா போன்றோர் நடிக்க டி ஆர் சுந்தரம் படத்தை இயக்கினார் புதுவிதமான கதை அமைப்பைக் கொண்ட இப்படம் நன்றாக ஓடியது



கோவை நாராயணன் கம்பெனி தயாரித்த, கணவனே கண்கண்ட தெய்வம் மற்றும் பாக்கியலட்சுமி படங்களில் வேலை செய்த டைரக்டர் கே வி சீனிவாஸ் மாடர்ன் தியேட்டர்சுக்காக ஒரு படம் டைரக்ட் செய்ய வந்தார் அந்தப் படம் தான் யாருக்குச் சொந்தம்? இந்தப் படத்தில் கன்னட நடிகர் கல்யாண் குமார் தேவிகா மனோகர், எஸ் வி சுப்பையா போன்றோர் நடித்தனர் இப்படம் 1963ல் எடுக்கப்பட்டது. சற்று பின்னோக்கி போய் சில முக்கியமான விஷயங்களை இங்கே சொல்ல வேண்டி இருக்கிறது

கடந்த, 1948-1950ம் ஆண்டில் சேலம் ஓரியண்டல் தியேட்டரில், கே ஆர்.ராமசாமியின் நாடகக் கம்பெனி பிரபல நாடகங்களை நடத்தி வந்தது நல்ல வசூல் இருந்தாலொழிய, நாடகக் கம்பெனியை நடத்துவது என்பது அவ்வளவு லேசான காரியமல்ல அந்த நிலை கே ஆர் ராமசாமிக்கும் வந்தது நாடகக் கம்பெனியை மூடி விட்டார் அதனால் அதில் நடித்துக் கொண்டிருந்த நடிகர்களில் சிலர் எங்கே போவது என்று தெரியாமல், மாடர்ன் தியேட்டர்சில ஐக்கியமாயினர் அவர்களில் முக்கியமானோர் ஓ ஏ கே தேவர், கே கே சவுந்தர் டி எம் சவுந்திரராஜன் சீர்காழி கோவிந்தராஜன் ஏ எல் ராகவன் இவர்கள் எல்லாரும் நிரந்தரமாக ரிகர்சல் ஹாலில் தங்கினர் ஏறக்குறைய 30 நடிகர்களுக்கும் அங்கே தான் உணவு

சனிக்கிழமை, புதன்கிழமை தவறாமல் அவர்கள் எண்ணெய் தேய்த்து குளிக்க வேண்டும் ஸ்டண்ட் பார்ட்டியை சேர்ந்தோர் கத்திச் சண்டை சிலம்பாட்டம் மல்யுத்த பயிற்சிகளைப் பெற வேண்டும் இது கட்டாயமான ஏற்பாடு

அவர்கள் தனியாக தங்கள் குடும்பங்களில் இருந்தால் கூட இவ்வளவு சவுகர்யங்கள் நிச்சயம் கிடைக்காது. யாருக்கும் எந்தக் குறையும் வைத்ததில்லை டி ஆர் சுந்தரம். நாடகக் கம்பெனியில் இருந்து வந்த நடிகர்களுக்கு காளி என ரத்னம் காமெடி சீன்களை உருவாக்க யோசனை சொல்லி, நடிக்கவும் வைப்பார்.
இதைப் போல இன்னொரு கோஷ்டியும் அங்கே தங்கி இருந்தது. அவர்கள் இசைக் குழுவை சேர்ந்த வாத்திய கோஷ்டியினர். அவர்களும் தங்கள் பங்குக்கு புதிய புதிய டியூன்களை போட்டு பார்ப்பர். மியூசிக் டைரக்டர்கள் ஜி ராமநாதன், கே வி மகாதேவன், எம் எஸ் விஸ்வநாதன் போன்றோர் இங்கே தங்கி இருந்ததால் புதிய டியூன்களுக்கு ஒத்திகை பார்ப்பது சுலபமாக போய் விட்டது.
படப்பிடிப்புக்கான வசன ஒத்திகை, நடன ஒத்திகை ரிகர்சல் ஹாலில் தான் நடக்கும். தினமும் காலையில் ஒரு தடவை டி ஆர் சுந்தரம் இங்கே வந்து பார்த்துவிட்டு போவார் என்பதை ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். ஆரம்ப காலங்களில் படங்கள் எடுக்கப்பட்ட போது வெளியூரிலிருந்து வரும் பிரபல நடிக, நடிகையருக்கு சேலத்தில் தங்குவதற்கு நல்ல ஓட்டல் வசதி கிடையாது. அதனால் சீரங்கபாளையம், குமாரசாமிப்பட்டி, அஸ்தம்பட்டி போன்ற இடங்களில் நடிக, நடிகையர் வசதிகளுக்கு ஏற்றாற்போல வீடு, பங்களாவை மாடர்ன் தியேட்டர்ஸ் வாடகைக்கு எடுத்து வைத்துக் கொள்ளும். என் எஸ் கிருஷ்ணன், எம் ஜி ஆர், பி யு சின்னப்பா, டி ஆர் ராஜகுமாரி போன்றோர் இந்த பங்களாக்களில் தங்கி படத்தில் நடித்திருக்கின்றனர்.
இவர்கள் வரும்போது தங்கள் சமையல்காரர்களை கூட்டி வந்து விட்டால் அவர்களுக்கான வசதிகள் செய்து கொடுக்கப்படும். இதைக் கவனித்துக் கொள்ள வேண்டியது ரிகர்சல் ஹால் மானேஜரின் வேலை. அந்த வேலையை திறமையுடன் நிர்வகித்து வந்தவர்களுள் முக்கியமானவர் எம் ஏ வேணு. வேணுவின் வாழ்க்கையை புரட்டினாலே அது ஒரு சினிமாக் கதை போல இருக்கும். மாடர்ன் தியேட்டர்சின் ஆரம்பகால படங்களில் துணை நடிகராக தன் வாழ்க்கையை ஆரம்பித்தவர் வேணு. அவரது சுறுசுறுப்பாலும், கடுமையான உழைப்பாலும் முதலாளியின் கவனத்தை வெகு சீக்கிரத்தில் கவர்ந்து விட்டார். அதுமட்டுமல்ல டி ஆர் சுந்தரத்தின் கோபத்தையும் இடி தாங்கி போல இறங்கும் திட்டுக்களையும் பொறுமையுடன் வாங்கிக் கொள்வார் வேணு. ரிகர்சல் ஹாலில் ஒரு இடத்தில் எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்கும் திறமை படைத்தவர் என்ற பெயரை விரைவில் பெற்று விட்டார். ஆரம்ப காலத்தில் ஸ்டுடியோவின் மானேஜர்களாக இருந்த முனிசாமி முதலியார், சிங் நாராயணசாமி நாயுடு பரசு போன்றோரிடம், நல்ல பெயர் எடுத்தவர் வேணு. "வேணுவைக் கேள்!" என்ற பேச்சு எல்லாப்புறமும் எதிரொலிக்கும்.
மனிதனுக்கு நல்ல நேரம் வந்தால் அது நிரந்தரமாக நிலைத்து நிற்பதில்லை. தொடர்ந்து வருவது கெட்ட நேரம் தான். என்றாலும் இதை யாரும் தெரிந்து கொண்டதாக தெரியவில்லை. வேணு மிகவும் செழிப்படைய தொடங்கினார். அவரிடம் உதவி கேட்டு வருவோரை வெறும் கையுடன் அனுப்பியது கிடையாது. இந்த தாராள மனப்பான்மை டி ஆர் சுந்தரத்தின் காதுக்கும் போனது. இதையெல்லாம் அவர் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.
ஸ்டுடியோவில் எடுத்த இரண்டொரு படங்கள் வியாபார ரீதியாக சரியாக

போகவில்லை அஞ்சலிதேவி டி ஆர் மகாலிங்கம் நடித்த மாயாவதி ரிலீஸ் ஆன முதல் நாளே படத்தின ரிப்போர்ட சரியாக இலலை எனபது முதல 'மேட னி ஷோ'வில தெரிந்து விட்டது டி.ஆர் சுந்தரம் மாலையில் வழக்கம் போல் ரிகர்சல் ஹாலுக்கு வந்தார் அங்கே இருக்க வேண்டிய மானேஜர் இலலை விசாரித்த போது வேணு மாயாவதி படத்தை பார்க்க தன் குடுமபத்தாருடன மாடர்ன தியேடடர்ஸ காரில் போயிருபபதாக கூறினர் வேணு வந்த பின் அவரை அருகில் அழைத்து அவரது கன்னத்தில் ஓங்கி ஒரு அறை கொடுத்தார் என்ன ஆத்திரமோ முதலாளி கொடுத்த அறையின் வேகம, அடுத்து இருந்தவர்களும் பயந்து தங்கள் கன்னத்தில் கை வைத்துக் கொண்டதாக பிறகு கூறினர் அடிவாங்கிய வேணுவிறகு ஆத்திரம வந்தது கோபத்தில என்ன பேசுகிறோம என்று தெரியாமல முதலாளியை கண்டபடி திட்டிவிட்டார் திட்டிய மறுகணமே அவர் வெளியேறி விட்டார் வேணுவின் சகாபதம முடிந்தது என்று எல்லாரும் முடிவு கட்டி விட்டனர் மறுநாள காலை டி ஆர் சுந்தரம ரிகர்சல ஹாலுக்கு வந்தார் வேணு வேலைக்கு வரவில்லை என்பதை அறிந்தார் என்ன நினைத்தாரோ ஒரு ஆளை அனுப்பி, வேணுவை அழைத்து வரச் சொன்னார் இதையே எதிர்பார்த்து இருந்தது போல. வேணுவும் வந்து விட்டார்

டி ஆர் சுந்தரம் எதுவும் பேசாமல் ஒரு கட்டு பணத்தை அவரது கையில் கொடுத்து 'போய எங்காவது நலலபடியாக பிழைத்துக் கொள என்று சொலலி விட்டார் அடித்த தானும், திட்டிய வேணுவும இனி ஒன்றாக இணைந்து செயல்பட முடியாது என்ற முடிவுக்கு முதலாளி வந்தது தான இதறகு காரணம அத்துடன இனி வேணு எங்காவது போய் பிழைத்துக் கொள்ளட்டும் என்ற நலலெண்ணமும ஒரு காரணமாக இருக்கலாம வேணு தனியாக கம்பெனி ஆரம்பித்து கோவை சென்டரல் ஸ்டுடியோவை தன் படங்களுக்காக உபயோகபபடுத்திக் கொண்டார் மாடர்ன தியேட்டர்சில இருபது படங்களுக்கு மேலாக உதவி டைரக்டராக பணியாற்றிய கே சோமுவை தன் முதல் படத்திற்கு டைரக்டர் ஆக்கினார் நாடகத்துறையில அனுபவம் வாயந்த ஏ பி நாகராஜன் கதை வசனகர்த்தாவாக உருவெடுத்தார் மாங்கலயம பெண்ணரசி மற்றும நாலவர் என்று பல படங்களை வேணுவும் இன்னும் சிலரும கூட்டு சேர்ந்து தயாரித்து வெளியிட்டனர் இவைகளுக்கு பின தான வேணு சற்று அகலக் காலை வைத்தார் சம்பூர்ண ராமாயணம் படத்தின் மூலமாக இபபடத்திறகு சேலம் ரத்னா ஸ்டுடியோவில் இருந்து ஒரே "புளோரில பெரிய செட்டுகள போடப்படடன மிகவும வேகமாக படம வளரத் தொடங்கியது.

அபபோது வேணு இரண்டு பெரிய கார்கள் மற்றும் சிறிய கார்கள் ஜீப மற்றும் சில கார்களை தன புரொடக்ஷன வேலைகளுக்காக உபயோகப்படுத்திக் கொண்டு இருந்தார் சேலம வந்து விடட வேணுவைப பறறி அவ்வபபோது தகவலகள டி ஆர் சுந்தரம காதுகளில விழுந்த வண்ணம் இருந்தன ஒரு நாள், வேணுவை அழைத்து வரச் சொல்லி. ஆள் அனுபபினார் வேணுவும, ரிகர்சல ஹாலுக்கு வந்தார்

அபபோது நடந்த உரையாடல்கள்

'எபபடி வந்தாய?

'காரில

'என்ன கார்?

'செவர்லே '
'எங்கே அது?
'வெளியில் நிற்கிறது
இதற்குப பின டி ஆர் சுந்தரம வேணுவுக்கு படம எடுக்கும் தொழிலைட் பற்றிடும் அதில ஏறபடும லாட நஷ்டங்களையும செலவுகளை எங்கே எபபடி சுருக்குவது எனபது டற்றி, அரைமணி நேரம் பாடம் எடுத்தார்
கணகளில் நீர் மலக அதைக் கேட்டுக் கொண்டிருந்த வேணு போகும போது
டி ஆர் சுந்தரத்தின் கால்களில் விழுந்து வணங்கி விடை பெற்றுச் சென்றார்
அதறகு பின் சம்பூர்ண ராமாயணம படத்தை வெளியிட்டார் அபபடம வெற்றிப்படமாக அமைந்தது

## முதலாளி (16)

சம்பூர்ண ராமாயணம் படத்தை தொடர்ந்து வேணு எடுத்த படம் முதலாளி தன முதலாளியை மனதில வைத்துக் கொண்டு தான் படத்திற்கு இந்த பெயரை வைத்தார் என்று பேசிக் கொண்டனர் இப்படத்திற்கு கதை வசனம் டைரக்டர் அனைவரும் புதுமுகங்கள டைரக்டராக உருவெடுத்தது முக்தா சீனிவாசன எனபவர் இவர் ஆரமபகாலத்தில் ஸ்டுடியோவில அசிஸடெண்ட டைரக்டராக பணியாற்றியவர் இவரது சகோதரர் முக்தா ராமசாமி மாடர்ன் தியேட்டர்ஸ காரியாலயத்தில டைபிஸடாக வேலை பார்த்தார் காரியாலடத்திலும சரி ஸ்டுடியோவிலும சரி யாரும அவ்வளவு இலகுவாக வேலையில சேர்ந்து விட முடியாது சகோதரர்கள் இருவரும், தஞ்சை மாவட்டத்தை சேர்ந்தவர்கள் பெரியவர் ராமசாமிக்கு மாடர்ன தியேட்டர்ஸ ஆபீசில டைபபிஸ்ட வேலை கிடைத்தவுடன, சகோதரர் சீனிவாசனுக்கு ஸ்டுடியோவில உதவி டைரக்டராக வேலை வாங்கி கொடுத்தார் அதறகு பின் அவர்கள் சென்னைக்கு போனது தனிக் கதை!



மாடர்ன தியேட்டர்ஸ் அலுவலகத்தில் ஐம்பதுக்கும் மேற்பட்ட பட பிரதிநிதிகள் இருந்தனர் படம் வெளியிடும் போது ஒவவொரு ஊருக்கும் இவர்கள் படப்பெடடியோடு பயணபபடுவது வாடிக்கை இவர்களை கண்காணிக்க, அலுவலகத்தில் தனியாக ஒரு மானேஜர் இருந்தார் இதைத் தவிர மதுரை திருநெல்வேலி கோவை சென்னை போன்ற இடங்களில மாடர்ன தியேட்டர்சுக்கென்றே தனி அலுவலகங்கள இருந்தன பிரதிநிதிகள் அந்தந்த அலுவலகங்களில் தங்கி தங்களது தினசரி வேலைகளை தொடர வேண்டும

சென்னையில இருந்த கிளை சரியாக செயலபடவில்லை எனறு முதலாளிக்கு தகவல வர, சேலத்திலிருந்து இருவரை சென்னைக்கு அனுப்பி வைத்தார் டி ஆர் சுந்தரம அவர்கள் தான முக்தா சகோதரர்கள் முதலாளியின நமபிக்கைக்கு உகந்தவர்களான இவர்களை, சென்னை வரும்போதெலலாம் சந்திபபதை ஒரு வழக்கமாக வைத்திருந்தார் டி ஆர் சுந்தரம

சேலத்தில் அப்போது 'டிரைகிளீனிங' வசதி இல்லை முதலாளியின் துணிகள் யாவும் விலை உயர்ந்தவை அதனால அவைகளை சலவைக்கு சென்னைக்கு கொண்டு வருவர்

சகோதரர்கள் வீட்டில் கொடுத்து விட்டால், அவர்கள் உரிய இடத்தில் கொடுத்து சலவை செய்து அடுத்த தடவை முதலாளி வரும்போது, தயாராக வைத்திருப்பர் டி ஆர் சுந்தரம் துணிகளை கொண்டு வந்து போட்டு விட்டால், அந்த துணிகளின் பாக்கெட்டுகளை சோதனை செய்து விட்டுதான் ராமசாமி சலவைக்கு போடுவது வழக்கம் அப்போது ஒரு தடவை அவர் சலவைக்கு போடும் முன் சோதனை இட்ட போது பையில இருபத்தி ஐந்தாயிரம் ரூபாய பணம் இருந்ததை கண்டார் அதை எடுத்து பத்திரமாக வைத்திருந்து டி ஆர் சுந்தரம் சென்னை வந்தபோது, அவரிடம் கொடுத்த போது அவர் அளவு கடந்த மகிழச்சியடைந்தார் என்று, இந்நிகழச்சியை முக்தா சீனிவாசன் ஒருமுறை குறிப்பிட்டிருந்தார்

சென்னைக்கு வரும்போது முக்தா சகோதரர்களின தாய போட்டு கொடுக்கும் காபியை டி ஆர் சுந்தரம் சுவைக்க தவறுவதில்லை இதற்கு பின் சகோதரர்கள் சொந்தபடக் கம்பெனி ஆரம்பித்து, பல படங்களை எடுத்து சினிமா உலகில ஒரு நிரந்தர இடத்தை பிடித்தனர் அவர்களின் இந்த வளமான வாழவுக்கு வித்திட்டவர் டி ஆர் சுந்தரம் தான்! இதைபோல பலர் செழித்து வளரவும் அவர் பாதை அமைத்துக் கொடுத்தார் இப்போதும் உயிரோடு இருக்கும் சிலர் மனநெகிழச்சியுடன டி ஆர் சுந்தரம் அவர்களை நினைவு கூருகின்றனர் என்றால் அவர் அவர்களுக்கு செய்த மறக்க முடியாத உதவிகளே காரணம் நடிகர் மனோகர் நடிகை மனோரமா, பின்னணி பாடகர் டி எம சவுந்திரராஜன ஆகியோர் அவரை பற்றி மனமுருக எழுதியிருக்கும் நினைவுகளே அதற்கு சாட்சி டைரக்டர் கே வி சீனிவாசன் 1963ம ஆண்டு மாடர்ன தியேட்டர்சுக்காக டைரக்ட் செய்த படம் யாருக்கு சொந்தம்.

இந்த சமயத்தில் உடல் நலக் குறைவினால் பாதிக்கப்பட்டு நர்சிங் ஹோமில் சேர்க்கப்பட்டுவிட்ட ஆர் வி சொக்கலிங்கம் முன்னைப் போல தீவிரமாக ஸ்டுடியோ நிர்வாகத்தில் ஈடுபட முடியாது என்பதை உணர்ந்த டி ஆர் சுந்தரம் நிர்வாகத்தை கவனித்துக் கொள்ள தன் நெருங்கிய நண்பர்கள் மூவர் அடங்கிய கமிட்டி ஒன்றை நியமித்தார் தினசரி நிர்வாகத்திற்கு இந்த நடைமுறை ஒத்து வந்தாலும் தனது எதிர்பார்பபு நம்பிக்கை எல்லாம் வீணாக போயவிட்டதே என்று மிகவும் வருந்தினார் டி ஆர் சுந்தரம் இதனால் அவர் பல இரவுகளில சரியாகத் தூங்கவில்லை இரவு குறித்த நேரத்தில் சாப்பிட மறுத்தார் ஸ்டுடியோவை தனக்கு பின்னால் நன்றாக கவனித்துக் கொள்வார் என்று நம்பி சொக்கலிங்கத்தை அங்கு கொண்டு வந்து அமர்த்தினார் தன் மகன ராமசந்தரம் கோவையில இன்ஜினியரிங படிப்பை முடித்து வந்தவுடன அவரை ஒரு தொழிற்சாலைக்கு அதிபராக்க வேண்டும் என்று திட்டம் போட்டு வைத்து இருந்தார் அதற்காக ஜப்பானில இருந்து மெஷின்களை வரவழைக்க, ஸ்டுடியோவிற்கு அருகாமையில் தொழிற்சாலை கட்ட நிலத்தை வாங்கி வைத்திருந்தார் சொக்கலிங்கத்தின் உடலநலக்குறைவால் அவரது எதிர்பார்ப்புகளில் ஒரு பகுதி சிதைந்து போனது

யாருக்கு சொந்தம் என்ற படம் தயாராவதற்கு முன் 1962 நவம்பர் மாதம் தன மூத்த மகன் ராமசுந்தரத்திற்கு பழநியில திருமணம் செய்து வைத்தார் மணபபெண் கலைவாணி, டி ஆர் சுந்தரத்தின நெருங்கிய குடும்பத்தை சேர்ந்தவர் மாடர்ன் தியேட்டர்ஸ் அதிபர் வீட்டுத் திருமணம என்பதால கருணாநிதி பழநிக்கே வந்து இருந்தார் உடன் முரசொலி

மாறனும், மற்ற நண்பர்களும் வந்து இருந்தனர் பெரியவர் முருகேச முதலியாரின் மேற்பார்வையில் நடந்த இந்த திருமணம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது தன் வீட்டை கவனித்து கொள்ள ஒரு மருமகள் வந்துவிட்டதால் அவருக்கு மிகவும் திருப்தி அவரது தேவைகளையும் கவனித்துக் கொள்ள வீட்டிற்கு ஒரு பெண் தேவை தானே?

இந்த இடத்தில், ஒரு முக்கியமான விஷயத்தை குறிப்பிட வேண்டும் டி ஆர் சுந்தரம் திருமணம் செய்து கொண்டு வந்த இங்கிலாந்தைச் சேர்ந்த "கிளாடிஸ் அம்மையார் டி ஆர் சுந்தரத்திற்கு இரண்டு வாரிசுகளை பெற்றுத் தந்து விட்டு மறுபடியும் லண்டனுக்கே போய் விட்டார் மகனுக்கு திருமணம் நடந்த பின் டி ஆர் சுந்தரம் சகஜமான பழைய வாழ்க்கைக்கு திரும்பி விட்டார் என்று சொல்ல முடியாது அதனால் தான் வெளியில் இருந்து வந்த டைரக்டர் யாருக்கு சொந்தம் படத்தை டைரக்ட் செய்தார் தன் எதிர்பார்ப்புகள் எதுவும் தோல்வியடையாது என்ற நம்பிக்கையில். முன்னோக்கி நடைபோட்டு கொண்டிருந்த டி ஆர் சுந்தரத்திற்கு சொக்கலிங்கத்தின் சுகவீனம் ஒரு பின்னடைவு இருந்தாலும், எத்தனை நாட்களுக்கு அதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருக்க முடியும்

அடுத்த படமான கொஞ்சும் குமரிக்கு பூஜை போட்டார் மெனி ரிவர்ஸ் டு க்ராஸ் எனும் ஆங்கில படத்தை தழுவிய கதை அது! அந்த படத்தின் கதாநாயகி ஒரு "ரவுடி டைப் ஹீரோவை முரட்டுத் தனமாக காதலிக்க கதாநாயகன் மறுக்க அவனைத் துப்பாக்கி முனையில் தன் சகோதரர்களின் ஆதரவில் மணக்கிறாள் இது தான் அந்தக் கதை இந்த கதைக்கு மனோரமா தான் மிகவும் பொருத்தமாக இருப்பார் என்று நினைத்த டி ஆர் சுந்தரம் முதன் முதலாக, ஒரு காமெடி நடிகையை கதாநாயகி ஆக்கினார் முரட்டு வில்லன் பாத்திரங்களில் நடித்துக் கொண்டிருந்த மனோகரை இந்த படத்தில் கதாநாயகனாக்கினார் இந்தப்படத்தில் டி ஆர் சுந்தரம் பல புதுமைகளை செய்தார் அவைகளை சொல்லும் முன் ஒரு புதிய செய்தி!

கொஞ்சும் குமரிக்கு வேதா தான் சங்கீத டைரக்டர் இப்போது மிகவும் பிரபலமாக இருக்கும் பாடகர் ஜேசுதாஸ் மாடர்ன் தியேட்டர்சுக்கு பாட வந்தார் "வாய்ஸ் டெஸ்ட் எடுத்துப் பாருங்கள் என்று டி ஆர் சுந்தரம் சொல்லி விடவே ஜேசுதாசின் வாய்ஸ் டெஸ்ட் எடுக்கப்பட்டு ஓ கே ஆனவுடன் கொஞ்சும் குமரியில் ஜேசுதாஸ் பாடல்களை பாடினார் மாடர்ன் தியேட்டர்சுக்காக பாடியது தான் ஜேசுதாஸின் முதல் பாட்டு பாடல்களை வாலியும் ஓட்டலில் வேலை செய்து கொண்டிருந்த கருணைதாசன் என்பவரும், வசனத்தை மாறனும் எழுதினர்

இந்தப்படத்தின் ஷூட்டிங் நடந்து கொண்டு இருக்கையில் அவசர வேலையாக, இரண்டு தினங்கள் டி ஆர் சுந்தரம் சென்னை போக வேண்டியிருந்தது படத்தை ஜி விஸ்வநாதனைத் தொடர்ந்து டைரக்ட் செய்ய சொல்லிய பின் கதாநாயகன் மனோகரை அழைத்து தான் சென்னைக்கு சென்று வருவதாக அவரிடம் மட்டும் சொல்லி விட்டு, புறப்பட்டார்

அன்று இரவு, படுக்கையில் படுத்த டி ஆர் சுந்தரத்திற்கு திடீரென உடல் நலக்கோளாறு ஏற்பட்டது பிரபல டாக்டர்கள் அவரை கவனித்தும் பயனில்லை மறுநாள் மாலை டி ஆர் சுந்தரம் அமரராகிவிட்டார் நிறைவேறாத பல கனவுகளை நெஞ்சில் சுமந்தபடி

## முதலாளி (17)

திடீரென உடல நலக்கோளாறு ஏற்பட்டு டி ஆர் சுந்தரம் அமரராகி விட்டார் மேக்கபபைக் கூடக் கலைக்காமல் டபபிங் பேசிக் கொண்டிருந்த மனோரமாவுக்கு இந்த செய்தி எட்டி, 'ஓ' வென்று அவர் அலறிய பின் தான் மற்றவர்களுக்கே விஷயம் தெரிந்தது



ஸ்டுடியோவின அஸ்திவாரத்தையே தாங்கிக் கொண்டு இருந்த ஒரு தூண் சாய்ந்து விட்டது என்றால் , முதலில் யாரும நம்பவே இல்லை ஏனெனில, தனக்கு உடல் நலமில்லை எனறு டி ஆர் சுந்தரம் எபபோதுமே படுக்கையில் படுத்தது இலலை செய்தியை கேள்விபபட்டவுடன் அவ்வளவு பேரும், டி.ஆர் சுந்தரம பங்களாவிறகு வந்து விட்டனர் ராமகிருஷ்ணா ரோடு அல்லோகலபபட்டது சேலம், கண்டிராத மக்கள் கூட்டம் அவர் வீட்டு வாயிலின முனனே! சேலத்திறகு பெருமை சேர்த்த அந்த நல்ல மனிதரின இழபபை அமமக்களால தாங்கிக் கொளள முடியவிலலை சேதி கேட்டவுடன சென்னையில் இருந்து கருணாநிதி எம் ஜி ஆர் நமபியார் தஙகவேலு போன்றோர் வந்து விட்டனர் எல்லாருமம மயானத்திற்கு வந்து அந்த மாபெரும் சினிமா உலக மேதைக்கு தங்களின் இறுதி மரியாதையை செலுத்தினர்

'எங்களுக்கெல்லாம் உடம்புக்கு ஏதாவது நோய் வந்து விட்டால் டாக்டரை உடனே வரவழைத்துக் காட்டும் இந்த தெய்வம், தன் உடம்பை அவ்வப்போது பரிசோதித்துக் கொள்ளவில்லையே ' என்று தொழிலாளர்கள் கதறியது கேட்போர் நெஞ்சைக் கரைத்தது.
தன் உடல்நலத்தின் மீது டி ஆர் சுந்தரத்திற்கு அளவு கடந்த நம்பிக்கை ஏனெனில் அவர் எந்த விஷயத்திலும் எல்லை மீறியது கிடையாது.
அலாரம் வைக்காமலேயே, காலை 5:30 மணிக்கு எழுந்து விடும் அவர் காலைக் கடன்களை முடித்த பின் எலுமிச்சை சாறு கலந்த பிளாக் டீ குடிப்பார் அதைத் தொடர்ந்து பங்களா பால்கனியில் 'வாக்கிங்' "வாக் செய்யும் போது கேட்டில் யாராவது வந்து நின்றால் அவர்களை விசாரித்து ரிகர்சல் ஹாலுக்கு வரச் சொல்லி விடுவார் இந்த நேரம் தான் அவருடன் பேசுவதற்கு சரியான சந்தர்ப்பம் என்று அங்கு வருவோருக்கு தெரியும் அத்துடன், அன்று என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி முடிவு செய்வதும் மகனுடன், மனம் விட்டு பேசுவதும் இந்நேரத்தில் தான்.
வாக்கிங் முடித்தவுடன் அன்றைய நாளிதழ்களை பார்ப்பார் முக்கிய செய்திகளை, மகனுடன் பகிர்ந்து கொள்வார் பின் சரியாக 8.15 மணிக்கு குளிக்கப் போனால், பத்து நிமிடம் தான்' 8:30 மணிக்கு டைனிங் டேபிளில் உட்காரும்போது "டிரிம் மாக டிரஸ் செய்து கொண்டு இருப்பார் எல்லாமே, லேட்டஸ்ட் பேஷன் துணிகள் டிபன் சாப்பிடும் போதே மதிய சாப்பாடு மற்றும் இரவு உணவு குறித்து அவரிடம் கேட்டுக் கொண்டு அதன்படி சமைக்க வேண்டும் டிபன் முடிந்தவுடன் 8 40க்கு கார் சவாரி காருக்குள் நுழையும் போது அவரது செல்ல நாய் அவர் அருகே வந்து நிற்கும் (லேபரடார் இனத்தை சேர்ந்தது அது) அதைத் தட்டிக் கொடுத்து அதனிடம் இரண்டு பிஸ்கட்டுகளை கொடுத்து விட்டு, காரில் பயணிப்பார்.
அவரது முதல் விஜயமே. அவர் நடத்தி வந்த கெஜலட்சுமி டவர் பிரஸ் ஆபீசுக்கு தான்' அங்கிருந்து தான் 'சண்ட மாருதம் பத்திரிகை வெளிவந்து கொண்டிருந்தது என்பதை. ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன் 'வேலசாமி கவி, மேதாவி கண்ணதாசன் போன்றோர் அப்பத்திரிகையின் ஆசிரியராக இருந்திருக்கின்றனர்.
பிரஸ்சில் என்னென்ன வேலைகள் நடக்கின்றன என்பதை கவனித்து தேவைப்பட்டால் சில ஆலோசனைகளையும் சொல்லி விட்டு, மாடர்ன் தியேட்டர்ஸ் ஆபீசுக்கு வருவார் முக்கியமான தபால்கள் அவரது உத்தரவுக்காக காத்துக் கொண்டு இருக்கும் தகுந்த யோசனைகளை சொல்லி விட்டு "ரிகர்சல் ஹால் பக்கம் வருவார் மறுநாள் ஷூட்டிங்குக்கு தேவையான அனைத்து விஷயங்களையும் அங்கே டிஸ்கஸ் செய்து விட்டு, ஸ்டுடியோவிற்கு வந்து அனைத்து டிபார்ட்மென்டுகளையும் கவனிப்பார் அன்று அவருக்கு ஷூட்டிங் என்றால் படப்பிடிப்பில் கலந்து கொள்வார் வேறு டைரக்டர்கள் டைரக்ட் செய்கின்றனர் என்றால் ஓரிரு நிமிடங்கள் அதைப் பார்த்து விட்டு

அங்கிருந்து அகன்று விடுவார்

படப்பிடிப்பு நடக்கிறது என்றால் சாப்பாடு அவருக்கு அங்கேயே வந்து விடும் சாப்பிட்டு முடித்தவுடன் அங்கே இருக்கும் அவரது பங்களாவில் ஒரு மணி நேரம் ஓய்வு எடுத்துக் கொள்வார் பின் சுறுசுறுப்பாக வெளிவந்தவுடன் படப்பிடிப்பு ஆரம்பமாகி விடும் படப்பிடிப்பு முடிந்தவுடன் மீண்டும் ரிகர்சல் ஹால் மறுநாளைக்கு தேவையானது என்ன என்பதை விளக்குவார்

எது எப்படி என்றாலும் சரியாக இரவு 8 30 மணிக்கு பங்களா திரும்பி விடுவார் பெரிய வாயிலினுள் கார் நுழையும் போது கேட் அருகில் அவரது வீரா என்னும் நாய் காத்துக் கொண்டு இருக்கும் இதில், ஒரு முக்கிய விஷயம் என்னவென்றால் அதுவரை அந்த நாய், வீட்டில் எங்காவது ஒரு மூலையில் படுத்துக் கொண்டிருக்கும் சரியாக 8.30 மணிக்கு அது தானாகவே வந்து கேட்டின் அருகில் நிற்கும் எஜமானர் மீது அப்படி ஒரு விசுவாசம் காரை ஷெட்டில் நிறுத்தி விட்டு, நாயை தட்டிக் கொடுத்து விட்டுத்தான் டி ஆர் சுந்தரம் பங்களாவிற்குள் நுழைவார் அதே நாய் அவர் படுக்கையில் விழுந்த போது, கட்டிலின் அடியில் படுத்ததுதான் அவர் இறந்து பல தினங்கள் ஆன பின்பும் அந்த இடத்தை விட்டு நகராமல் எதுவும் சாப்பிடாமல் கிடந்து, உயிரை விட்டது

படப்பிடிப்பு இல்லாத நாட்களில் தன் கார்டனில் அமர்ந்து டீ சாப்பிட்டு கொண்டே செடிகளை வளர்ப்பது பாதுகாப்பது பற்றித் தோட்டக்காரனுக்கு யோசனைகள் சொல்வார் ஸ்டுடியோவில் தன் நண்பர்களுடன் டென்னிஸ் விளையாடுவார் அதில் மிக முக்கியமானோர் சங்கர முதலியார் கே என் சீனிவாசன் என் எஸ் சுந்தரராஜன் போன்றோர்

டி ஆர் சுந்தரத்திற்கு, மீன் பிடிப்பது மற்றுமொரு பொழுதுபோக்கு ஏற்காடு பங்களாவில் இருந்தால் ஏற்காடு ஏரியில் படகில் ஒரு புத்தகத்துடன் அமர்ந்து கொண்டு மீன் பிடிப்பார் ஒகேனக்கல் போனால் சொல்லவே வேண்டாம் அதற்கென்று நேரத்தை அவரே ஒதுக்கிக் கொள்வார்

ஸ்டுடியோவில் ஒரு புத்தக சாலையே இருந்தது தொழிலுக்கு தேவையான அத்தனை புத்தகங்களும் அங்கே இருந்தன கேமராமேன் சவுண்டு இன்ஜினியர் லேபாரட்டரியின் நிர்வாகிகள் என அத்தனை பேர்களும் அந்தப் புத்தகங்களினால் பலனடைந்தனர் ஆங்கில நாவல்களை போலவே, டி ஆர் சுந்தரத்திற்கு ஆங்கில படங்களும் பிடிக்கும் ஸ்டுடியோவில் இருக்கும் மினி தியேட்டரில் வாரம் இரண்டு ஆங்கில படங்களையாவது பார்த்து விடுவார் படப்பிடிப்பு முடிந்தவுடன் ஏதாவது நீண்ட இடைவெளி ஏற்பட்டால் வெளியூர் போய்விடுவது டி ஆர் சுந்தரத்தின் வழக்கம் குற்றாலத்தில் அப்போது சீசன் என்றால் அங்கே போய், பெரிய பங்களா ஒன்றில் தங்குவார் அவருடன் நாகிரெட்டியார் ஜெமினி வாசன் போன்றோரும் இணைந்து கொள்வர்

டி ஆர் சுந்தரம இறந்த பின் ஸ்டுடியோ நிர்வாகத்தையும் படபபிடிப்பு விஷயங்களையும
கவனித்துக் கொள்ள டைரக்டர்களின் போர்டு மூவரை நியமித்தது அவர்கள் பொறுபபில்
எடுத்த படங்கள் இரணடே இரண்டு தான்
அவை சித்ராங்கி மற்றும அமமா எங்கே எனனும படஙகள் இரணடுமே நனறாக
போகவிலலை காரணம தொழில் தெரியாதவர்கள் கையில பொறுபபு
கொடுக்கபபட்டதன் விளைவு
ஸ்டுடியோவில இருந்த தொழிலாளர்களுக்கு இது வாழக்கை பிரச்னை தொடர்ந்து
படங்கள் தோல்வி கண்டால் ஸ்டுடியோவின் நிலைமை என்னவாகும் என்று
அவர்களுக்கு தெரியாதா?
அதனால், ஸடுடியோவில இருந்த அனைத்து தொழிலாளர்களும ஒரு மீட்டிங்
போட்டனர் இதில் டெக்னீஷியன்களும் அடக்கம

## முதலாளி. (18)

டி ஆர் சுந்தரத்தின் திடீர் மறைவிற்கு பின ஸ்டுடியோ தொழிலாளர்கள் ஒன்று கூடி அடுத்து என்ன செய்வது என்று விவாதித்தனர் டி ஆர் சுந்தரம உயிரோடு இருந்த போது ஸ்டுடியோ எபபடி நடந்தது இபபோது, எப்படி நடக்கிறது என்பதை ஒபபிட்டு, பலர் பேசினர் இந்த நிலை நீடிக்கக்கூடாது என்பதில் உறுதியாக இருந்த அவர்கள் ஒரு மனதாக தீர்மானித்து ஒரு கோரிக்கையை மாடர்ன தியேட்டர்ஸ் நிர்வாகக் கூட்டத்தில சமர்பபித்தனர் அது, முதலாளி உயிரோடு இருந்த போது அவருடன அடிக்கடி ஸ்டுடியோவிற்கு வந்து பல டிபார்ட்மெனடுகளில் தன் கவனத்தை செலுத்தி வந்த முதலாளியின மூத்த மகன ராமசுந்தரம ஸ்டுடியோவின பொறுபபை ஏறக வேண்டும் என்பது தான் அந்தக் கோரிக்கை



தொழிலாளர்களின ஒருமித்த கோரிக்கையை, டைரக்டர்களால் நிராகரிக்க முடியவில்லை எலலாரும் ஒருமனதாக முடிவு செயது, ராமசுந்தரத்தை மானேஜிங் டைரக்டராக நியமித்தனர் அப்பா லண்டனில் படித்து விட்டு, தனக்கு சமபந்தமே இலலாத படத் தொழிலில இறங்கினார் அதே போல மகனும கோவையில இன்ஜினியருக்கு படித்து விட்டு படத்துறைக்கு வந்தார் டி ஆர் சுந்தரம, போட்ட திட்டபபடி நடந்திருந்தால் ராமசுந்தரம பெரிய தொழிலதிபர் ஆகியிருப்பார் அதற்கும், ஒரு பின்னணி இருக்கிறது.

மாடர்ன் தியேட்டர்ஸ் படஙகளை பொறுத்த வரை, பல பெரிய ஊர்களில விநியோக அலுவலகங்கள் இருந்தன அவற்றில மிக முக்கியமானவை, சென்னை அலுவலகங்கள் ஏனெனில் இங்கு பொறுபபில இருபபோருக்கு பட விநியோகத்தை பார்பபது மட்டும வேலை அலல'

சேலத்தில் இருந்து வரும அவசர வேலை களையும கவனிக்க வேண்டும நடிக, நடிகையரை படத்திற்கு ஒபபந்தம செய்வது அவர்கள தேதி கொடுத்து விட்டால அவர்களுக்கு தேவையான ரயில பயணச் சீட்டுகளை வாங்கிக் கொடுத்து, உரிய நாட்களில் சேலத்திற்கு அனுப்புவது என்று பல வேலைகள் இவை அனைத்தும் ஒழுங்காக நடக்க வேண்டும் என்பதை, சென்னை அலுவலகத்தில் இருபபோர் அறிவர்

இவர்களது 'கன்ட்ரோல்' பூராவும் சேலம் தலைமை அலுவலகத்தில் இருந்தது அங்கிருந்து, என்ன தகவல், வேலை வந்தாலும் உடனுக்குடன் நடத்திக் கொடுக்க வேண்டியது இவர்கள் பணி. ஆனால், இங்கே உள்ளோர் ஒழுங்காக நடந்து கொள்கிறார்களா என்பதை தெரிந்து கொள்ள எவ்விதமான சோதனையும் இல்லை அதனால், படங்களை ஓட்டுவதில் இருந்து நடிகர்களை ஒப்பந்தம் செய்வது உட்பட, பல விஷயங்களில் தில்லு முல்லு நடக்க ஆரம்பித்தது

சேலத்திலிருந்து ஒரு திறமை வாய்ந்த பட பிரதிநிதியை, சென்னை அலுவலகத்தை கவனித்து கொள்ள டி ஆர் சுந்தரம் அனுப்பினார் ஒழுங்காக வேலை செய்ய வேண்டும் கணக்கு வழக்குகளை சரியாக வைக்க வேண்டும் என்பது தான் முதலாளியின் நோக்கம் அனுப்பிய நபரோ சில ஆண்டுகள் ஒழுங்காக வேலை பார்த்தவர் தனக்கென ஒரு படக் கம்பெனியை நிறுவிக் கொண்டார் அதன் மூலம் பெரிய படங்களின் வினியோகத்தை சேலத்திற்கு வாங்கி பணம் குவித்தார் டி ஆர் சுந்தரம் அவரை வேலையை விட்டு அனுப்புவதற்குள் அவரே ராஜினாமாவும் செய்து விட்டார்

அடுத்தபடியாக அந்தப் பொறுப்புக்கு வந்தவர் முதலாளியின் இன்னொரு நண்பர் அவர் ஒரு பிரபல பிலிம் சுருள் வினியோகிக்கும் கம்பெனியில் வேலை பார்த்தவர் சில நாட்களில் அவரால் இரண்டு வேலைகளையும் செய்ய முடியவில்லை என்று அவராகவே முதலாளியிடம் சொல்லி ஒதுங்கிக் கொண்டார்

அதன் பின் தான் முதலாளி முக்தா சகோதரர்களை சென்னை அலுவலகத்திற்கு அனுப்பினார் அவர்களும் முதலாளியின் எதிர்பார்ப்புக்குத் தகுந்தாற் போல நடந்து கொண்டனர்

ராமசுந்தரம், கோவையில் இன்ஜினியரிங் படிப்பை முடித்து விட்டு வந்தவுடன், அவரை பிலிம் தொழிலில் விடாமல் ஒரு தொழிற்சாலை அதிபராக்க முடிவு செய்தார் டி ஆர் சுந்தரம் அதற்காக மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்டுடியோ அமைந்திருந்த பகுதியில் மூன்று ஏக்கர் நிலத்தை வாங்கினார் அவர் எண்ணத்தில் இருந்தது அட்டைப் பெட்டிகள் தயாரிக்கும் தொழிற்சாலை இதற்காக ஜப்பானில் இருந்து எந்திரங்கள் வாங்க ஆர்டர் கொடுத்து இருந்தார் அந்தப் பொறுப்பை அந்த பிலிம் சுருள் கம்பெனி அதிகாரியிடம் ஒப்படைத்தார் இடையில் என்ன நடந்ததோ அவர்களது நட்பில் தொய்வு ஏற்பட்டு எந்திரங்கள் வரும் நேரத்தில், முதலாளி இறந்து விட்டதால் அந்த தொழிற்சாலைக் கனவு கனவாகவே போய்விட்டது ஆக, ராமசுந்தரம் நிர்வகிக்க வேண்டிய தொழிற்சாலை ஆரம்பிக்கப்படாமலேயே போக, பட உலகிற்கு அவர் வர வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது சினிமாத் தொழிலில், அனுபவம் இல்லாத ராமசுந்தரம், மாடர்ன் தியேட்டர்சின் மானேஜிங் டைரக்டரானார் ஆனால் அவர் புத்தி கூர்மையுடையவராக இருந்ததால் தொழில் நுணுக்கங்களை வெகு விரைவில் கற்றுக் கொண்டார் இரண்டு படங்களின் தோல்விக்குப் பின் ஒரு நல்ல படத்தை தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் எல்லார்

மனதிலும் இருந்தது

கொஞ்சும் குமரி படத்தை அடுத்து, டி ஆர் சுந்தரம் ஒரு படத்தை தயாரிக்க திட்டமிட்டு இருந்தார் அது ஒரு இந்திப் படத்தின் தழுவல் அவரது மரணத்திற்கு பின் அவர் மகன் ராமசுந்தரம் அப்படத்தை எடுக்க விரும்பி அப்படத்திற்கான உரிமையை வாங்க மும்பை சென்றார் மும்பை சென்று விசாரித்த போது அப்பட உரிமையாளர் அதில் நடித்த கதாநாயகனே என்ற உண்மை தெரிந்தது அவர் தான், பிரபல நடிகர் ஷேக் முக்தார் படத்தின் பெயர் உஸ்தாத்தோன் - கி- உஸ்தாத்

இரண்டொரு தினங்களில் அந்த தயாரிப்பாளர் நடிகரும் ராமசுந்தரமும் நெருங்கிய நண்பர்களாகி விட்டனர் அந்த நடிகர், ஏற்கனவே மாடர்ன் தியேட்டர்சைப் பற்றி நிறையக் கேள்விப் பட்டிருந்த காரணத்தினால், படம் சம்பந்தப்பட்ட "பைல" இரண்டு பிரின்ட் மற்ற ரிக்கார்டுகள் யாவற்றையும் கொடுத்து இன்னொரு படமான தோ உஸ்தாத் என்ற படத்திற்கும் உரிமையை வழங்கினார்

இந்திப் படங்களை வாங்கிக் கொண்டு வந்தாயிற்று அதைத் தமிழில் எடுக்க வசனங்களை மொழி பெயர்த்து எழுத வேண்டும் அதற்கு வசனகர்த்தா ஏ எல நாராயணன ஏற்பாடு செய்யப்பட்டார் இந்தி வசனங்களை விட, தமிழ வசனங்கள் நன்றாக அமைந்தன படம் முடியும் வரை தன்னுடன் வசனகர்த்தாவை வைத்துக் கொண்ட ராமசுந்தரம தொழிலை பழகிக் கொள்ள எடிட்டர் பாலுவையும் அருகில் வைத்துக் கொண்டார் இப்படத்திற்கு கண்ணதாசன் பாடல்கள் எழுத வேதா இசை அமைத்தார் ஜெமினி கணேசன மனோகர் அசோகன தங்கவேலு, சாவித்திரி மணி மாலா, மனோரமா என்று ஒரு பெரிய கும்பலே இப்படத்திற்கு ஒப்பந்தமாயினர் பெரியவர் இருந்த போது எப்படி நடந்ததோ அதே போல் படப்பிடிப்பு திட்டமிட்டு, விரைவாக நடந்தது படம வெளியாகி நன்றாக போயிற்று அந்தப் படம் தான், வல்லவனுக்கு வல்லவன்

இப்படத்தின் பெரும் வெற்றியைக் கண்ட ஆந்திரத் தயாரிப்பாளர் ஒருவர் இதையே தெலுங்கில எடுத்துக் தரச் சொல்ல ராமசுந்தரத்தை அணுகினார் ராமசுந்தரமும முதல தெலுங்கு படத்தை இயக்கி வெற்றி கண்டார்

அடுத்த தயாரிப்பு இரு வல்லவர்கள் இப்படத்திற்காகத்தான முதன முதலாக ஜெயசங்கர் சேலம வந்தார் மனோகரும அவரும இரு வல்லவர்களாக நடித்தனர் குடும்பம மற்றும ஸ்டண்ட கலந்து எடுக்கப்பட்ட கதை இது இந்தக் கதையும ஷேக் முக்தார் கொடுத்த படத்தின் கதை தான்

இப்படமும் நன்றாக போயிற்று ஓரளவு பட உலகில் கால்பதித்து விட்ட ராமசுந்தரம், ஒரு ஆங்கிலக் கதையை படமாக்கினார் அந்தப் படத்தின பெயர் பேனிக் இன பாங்காக் தமிழில அதற்கு வல்லவன ஒருவன் என்று பெயர் வைத்து இருந்தனர் "தமிழக ஜேமஸ்பாண்ட்" என்று, ஜெயசங்கர் இப படத்தில் தான பெயர் பெற்றார்

## முதலாளி. (19)

சில சமயங்களில் உடன் இருப்போர் சரியான யோசனைகள் சொல்லவில்லை என்றால் முக்கியமான விஷயங்கள் கவனத்திற்கு வராமலே போய்விடும் தவறான அறிவுரைகள் சொல்வோர் எங்கும் இருப்பர் சினிமா உலகில், ராமசுந்தரம் கொஞ்சம் கொஞ்சமாக தொழிலைக் கற்றுக் கொண்டு வந்த போதிலும் நடிக நடிகையர் தேர்வில் தன் யோசனையாளர்களைத் தான் நம்பி இருந்தார்



புதிய படத்திற்கு நடிக நடிகையர் தேர்வுக்காக, சென்னையில் முகாமிட்டிருந்தார் ராமசுந்தரம் புதிய முகங்களை அறிமுகம் செய்ய வேண்டும், என்ற எண்ணம் அவருக்கு அவருடன் எப்போதும் இருக்கும் இரு நண்பர்களும், ஒரு உதவி டைரக்டரும் அறையினுள் அமர்ந்திருக்க, தேர்வுக்காக பிரபல நடிகை ஒருவர் தன் மகளை அழைத்து வந்திருந்தார் உதவி டைரக்டர் முதலில் கேட்ட கேள்விகளுக்கு ஒழுங்காக பதில் சொன்ன அந்த பெண் அடுத்தபடியாக, "உனக்கு நடனமாடத் தெரியுமா ஸ்டைலாக நடக்கத் தெரியுமா என்றெல்லாம் இடக்கு மடக்காக கேள்வி கேட்கவும் கோபித்துக் கொண்டு போய் விட்டார் அந்தப் பெண் தான் இந்தி பட உலகையே தன் நடிப்பால் அசர வைத்த ரேகா ஒரு அருமையான நடிகையை, மாடர்ன் தியேட்டர்ஸ் இழந்ததற்கு அந்த உதவி டைரக்டர் தான் காரணம் என்று கூறினர்

நடனம் நன்றாகத் தெரிந்த ஒரு பெண்ணை மறுநாள் தேர்வுக்கு வரச் சொல்லியிருந்தனர் வசதியில்லாததால் அப்பெண் டாக்சியில் வந்தார் மிகவும் அழகாக இருந்தார் ஆனால் கீழ்த்தாடை சற்று நீளமாக தெரிகிறது என்று உடன் இருந்தவர்கள் சொல்ல, அப்பெண்ணும் நிராகரிக்கப்பட்டார் பிற்காலத்தில் கனவுக் கன்னியாக ஜொலித்த ஹேமமாலினி தான் அந்தப் பெண்

மற்றவர்கள் சொல்லும் யோசனையைக் கேட்டு சொந்தமாக முடிவெடுக்கும் திறமை

டி.ஆர்.சுந்தரத்திற்கு உண்டு. அது, அவருக்கு அனுபவம் கற்றுத் தந்த பாடம்.
இரண்டு, மூன்று படங்களுக்கு பின் தான், நிர்வாகத்தில் கொஞ்சம் கொஞ்சமாக தேர்ச்சி பெற்றார் ராமசுந்தரம்.
வல்லவன் ஒருவன் படத்திற்கு பின் ராமசுந்தரம், எதிரிகள் ஜாக்கிரதை என்றொரு படத்தை தயாரித்தார். இதில், ரவிச்சந்திரன், எல்.விஜயலட்சுமி, மனோகர் போன்றோர் நடித்தனர். இதுவும், ஏறக்குறைய ஸ்டன்ட் படமாகவே இருந்தது.
மாறுதலுக்காக, ஒரு சமூகப்படம் எடுத்தால் நன்றாக இருக்கும் என்று கம்பெனி டைரக்டர்கள் கேட்டுக் கொள்ளவே, காதலித்தால் போதுமா? எனும் சமூகப்படம் தயாரானது. இதில், ஜெய்சங்கர், வாணிஸ்ரீ போன்றோர் நடித்தனர். மிகவும் கவனமாக தயாரிக்கப்பட்டதால், இப்படமும் நன்றாக போயிற்று. அடுத்த படம் எடுப்பதற்கு முன், எதிரிகள் ஜாக்கிரதை படத்தை தெலுங்கில், "டப்' செய்து வெளியிட்டனர்.
இதற்குப் பின் தான், வசனகர்த்தா ஏ.எல்.நாராயணன் ஒரு புதுவிதமான கதையை தயார் செய்தார். ஜெயிலில் இருந்து தப்பி வந்த நான்கு கைதிகள் ஒரு பேங்க்கை கொள்ளை யடித்து, அப்பணத்தை மூலதனமாக வைத்து ஒரு சினிமாப் படத்தை எடுக்கின்றனர். படமோ நூறு நாட்கள் ஓடுகிறது. அந்த மகிழ்ச்சியில், அவர்கள் நால் வரும் மீண்டும் சிறைக்குப் போகின்றனர். இக் கதையை, நான்கு கில்லாடிகள் எனும் தலைப்பில் ராமசுந்தரம் படமாக எடுத்தார். ஜெய்சங்கர், மனோகர், ஆனந்தன், ஓ.ஏ.கே. தேவர், தேங்காய் சீனிவாசன், சி.ஐ.டி.சகுந்தலா போன்றோர் நடித்தனர். கதை புதுவிதமாகவும், காமெடியாகவும் இருந்ததால் படம் மிகவும் நன்றாக போயிற்று.
தொடர்ந்து வந்தது, ஐஸ்டிஸ் விஸ்வநாதன். இந்த படத்தை தெலுங்கிலும் எடுத்தனர்.
புதிய கதைகளுக்கு, மக்களிடம் நல்ல வரவேற்பு இருக்கிறது என்பதை தெரிந்து கொண்டார் ராமசுந்தரம். அவருக்கு, தன் தந்தையைப் போல் ஆங்கில நாவல்கள் படிக்கும் பழக்கம் இருந்தது. நிறையப் படித்து, தான் படித்த கதைகளை மற்றவர்களுடன் விவாதிப்பார். ஓரளவு, படவுலகத்தின் நெளிவு சுளிவுகளை தெரிந்து கொண்டார் என்று தான் சொல்ல வேண்டும். ஆனாலும், 1970ல் அவர் எடுத்த, கருந்தேள் கண்ணாயிரம் ஒரு தோல்விப் படமாக அமைந்து விட்டது.
இதனால், மனம் சோர்ந்து போன ராமசுந்தரம் படம் எடுப்பதை சற்றே ஒத்தி போட்டார். ஏன் படங்கள் தோல்வியடைகின்றன, வெற்றிப் படங்களுக்கு என்ன பார்முலா என்பதைப் பற்றி யோசித்து, தந்தையிடம் பணிபுரிந்த, தொழிலாளர்களிடம் கலந்து, ஆலோசனை செய்தார்.
எல்லாவற்றிற்கும், நல்ல கதை அடிப்படை என்பது பாலபாடம். அதை ராமசுந்தரம் புரிந்து கொண்டு இருந்தாலும், நல்ல கதைக்கு பஞ்சம் எதனால் ஏற்பட்டது என்று அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. கதை சொல்ல வரும் கதாசிரியர்கள் அரைத்த மாவையே அரைத்தனர்.

அடுத்து, 1972ல் பலத்த ஏற்பாடுகளுடன் ஜெய்சங்கர், லட்சுமி ஆகியோர் நடிக்க, தேடி வந்த லட்சுமி எனும் படத்தை எடுத்தார் ராமசுந்தரம். படம் சுமாராக ஓடியது.

1974ல், பிராயசித்தம் படமும், 1979ல், வல்லவன் வருகிறான் எனும் படமும், அதே வருடம், காளி கோயில் கபாலி எனும் படமும் எடுக்கப்பட்டன. இந்த படங்கள் வெற்றிப் படங்களாக அமையவில்லை என்றாலும் சுமாராகப் போயின.

இதனால், தயாரிப்பில் சற்று தொய்வு ஏற்படவே, ஆண்டிற்கு ஒன்று என்று 1980ல், துணிவே தோழன் என்ற படமும், 1981ல், அன்று முதல் இன்று வரை எனும் படமும், 1982ல், வெற்றி நமதே எனும் படமும் எடுக்கப் பட் டன. இந்தப் படங் களும், எதிர் பார்த்த அளவுக்கு வெற்றியை தேடித் தரவில்லை.

தயாரிப்பில், சரி யான ஆலோசனைகள் இல்லாததால், மாடர்ன் தியேட்டர்சின் தயாரிப்புகள், தரம் இல்லாமல் போயின. அதனால், பட விநியோகஸ்தர்கள் படங்களை குறைந்த விலைக்கு கேட்டனர். இதனால், கம்பெனியின் வருவாய் குறைந்து விட்டது.

தொடர்ந்து வெற்றிப் படங்கள் கொடுக்க முடியாமல் போனதற்கு, முக்கிய காரணமாக, அங்கே வேலை செய்து வந்த தொழிலாளர்கள், யார் யாரையோ சுட்டிக் காட்டினர். ஆனால், தலைமை ஏற்று நடத்த, அங்கே இன்னொரு டி.ஆர்.சுந்தரம் இல்லையே என்று தான் ஸ்டுடியோ நிர்வாகம் கவலைப்பட்டது. தொடர்ந்து, நஷ்டம் ஏற்பட, படம் எடுப்பதை நிறுத்துவதை தவிர, வேறு வழி இல்லாமல் போய்விட்டது.

இந்தக் காரணத்தினால், மாடர்ன் தியேட்டர்ஸ் தன்னுடைய தயாரிப்பை நிறுத்திக் கொண்டது.

சினிமா உலகமே இதற்காக மிகவும் வருந்தியது. ஏனெனில், தரமான படங்களை தொடர்ச்சியாக கொடுத்துக் கொண்டிருந்த, ஒரு பெரிய நிறுவனம், தன் தயாரிப்பை நிறுத்தி விட்டது தான். இதற்கு காரணம். இதற்காக வெளிநபர்கள் யார் மீதும் குறை சொல்ல முடியாது. முழுக்க, முழுக்க இது ஸ்டுடியோ நிர்வாகத்தில் இருந்த சிலரின் அசிரத்தையால் தான் நடந்தது என்று, கலையுலக வல்லுநர்கள் பேசிக் கொண்டனர்.

## முதலாளி (20)

மாடர்ன் தியேட்டர்சின், வரலாற்றை, சில வரிகளில் சொல்ல விரும்புகிறேன்.
இதனுடைய நிர்வாகியும், ஸ்தாபகருமான டி.ஆர்.சுந்தரம் தான், இம்மாபெரும் ஸ்தாபனம் தலை நிமிர்ந்து நிற்க, காரணமாய் விளங்கினார்.
கடந்த, 1936ம் ஆண்டு, டி.ஆர்.சுந்தரத்தால், இந்த ஸ்டுடியோ ஆரம்பிக்கப்பட்டது. 1937ல், முதல் படம் சதி அகல்யா. தொடர்ச்சியாக, 30 ஆண்டுகளில் 99 படங்களை தயாரித்தார்.
நூறாவது தயாரிப்பு தான், ராமசுந்தரம் தயாரித்து டைரக்ட் செய்த, வல்லவனுக்கு வல்லவன்.



டி.ஆர்.சுந்தரம், 56 படங்களை தானே டைரக்ட் செய்தார். ஒரே டைரக்டர், இவ்வளவு படங்களை டைரக்ட் செய்தது, அக்கால கட்டத்தில் பெரிய சாதனை. தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சிங்களம், இந்தி, ஆங்கிலம் என, பல மொழிகளில் படம் தயாரித்த ஒரே ஸ்தாபனம் மாடர்ன் தியேட்டர்ஸ் தான்.
டி.ஆர் சுந்தரம், டைரக்டர், தயாரிப்பாளர் என்ற பெருமையுடன், சில படங்களில் அவரே கதாநாயகனாகவும் நடித்திருக்கிறார்.
முதன் முதலாக, கார்ட்டூன் காட்சிகளை, பத்மஜோதி என்னும் படத்திலும், இரட்டை வேடக் காட்சிகளை, உத்தமபுத்திரன் என்ற படத்திலும் அறிமுகப்படுத்தினார்.
ஏறத்தாழ, முப்பது ஆண்டுகள் தென்னிந்தியாவில் முதலாளி - தொழிலாளி பிரச்னை இல்லாமல், வெகு திறமையுடன் மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்தாபனத்தை, திறம்பட நடத்தியவர் டி.ஆர்.சுந்தரம். இது, சாதாரண காரியம் அல்ல.
ஒழுக்கம், உண்மை, கட்டுப்பாடு என்னும் விதிமுறைகளைத் தானும் கடைபிடித்து,

மற்றவர்களையும் கடைபிடிக்க வைத்து, தொழிலாளர்களுக்கு சிறந்த வழிகாட்டியாக இருந்தவர் டி.ஆர். சுந்தரம். இதனால், அவரிடம் எல்லாரும் பயபக்தியுடன் நடந்து கொண்டனர். தென்னிந்திய பிலிம் வர்த்தக சபையின், ஆரம்ப காலத்திலேயே அதில் அங்கத்தினராக இருந்த டி.ஆர். சுந்தரம், அதன் தலைவராக நான்கு முறை தேர்ந்தேடுக்கப்பட்டார். இது, அவரது திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

இன்றைய, தென் இந்திய பிலிம் வர்த்தக சபையின் புதிய கட்டடம், அவரது தீவிர முயற்சியின் பலனாக உருவாக்கப்பட்டது தான். திரைத் தொழிலில் பல நுட்பங்களை புகுத்தி வெற்றி பெற்ற பின்பும், அடக்கமாக இருந்தவர். குறைந்த நேரம், நிறையச் செலவு. அதனால், அவரால் நல்ல படங்களை கொடுக்க முடிந்தது. மாடர்ன் தியேட்டர்சில் பயின்ற தொழில் விற்பன்னர்கள் பலரும், அவரது பாதையிலேயே நடைபோட்டு வெற்றி கண்டனர். அதில், மிக முக்கியமானோர் இருவர். ஒருவர் டைரக்டர் கே.சோமு. மற்றவர் தயாரிப்பாளர், டைரக்டர் முக்தா வி.சீனிவாசன்.

நல்ல காரணங்களுக்காகவும், திரைத் தொழிலின் அபிவிருத்திக்காகவும் சட்ட திட்டங்கள் ஏற்படுத்தி, அவைகளைத், தானும் கடைபிடித்து, மற்றவர்களையும் கடைபிடிக்க வைத்தார் டி ஆர் சுந்தரம். திரைப்படத் தொழிலில் உள்ளோர், ஒழுக்கமான வாழ்க்கை வாழ வேண்டும் என்பதில், மிகவும் கண்டிப்பாக இருந்த அவர், தானே அதற்கு உதாரணமாகவும் இருந்தார். மாடர்ன் தியேட்டர்ஸ் ஸ்தாபனத் திற்கும், ஸ்டுடியோவிற்கும் பெரும் புகழைத் தேடித் தந்த இவர், புகழையே விரும்பாமல், ஒரு சாதாரண மனிதராக, ஊழியரோடு ஊழியராக நின்று பணிபுரிந்தார் என்று, அவரது தொழிலாளர்கள் இன்றும் அவரைப் போற்றி புகழ்கின்றனர்.

தென்மாநில திரைப்பட ரசிகர்கள் அனைவரும், இவரை நன்கு அறிந்திருந்த போதிலும், பொது இடங்களிலோ, இல்லை அரசியல் மேடையிலோ இவரை யாரும் காண முடியாது. டி.ஆர் சுந்தரம் ஒரு தயாரிப்பாளர், டைரக்டராக மட்டுமில்லாமல், சிறந்த டெக்னீஷியனாகவும் இருந்தார். திரைத் தொழில் சம்பந்தமான அத்தனை புத்தகங்களும், அவரது ஸ்டுடியோ லைப்ரரியில் இருந்தன. திரைத் தொழிலில் அவருக்கு தெரியாத நுணுக்கங்களே கிடையாது என்கிற முறையில், அனைத்தையும் கற்றுத் தேர்ந்தவர். கதை, பாடல், நடிப்பு, ஒலி, ஒளிப்பதிவு போன்ற எல்லா அம்சங்களையும் அறிந்து, அவற்றை மிகவும் நுட்பமாக, சிக்கனமாக, உபயோகிக்கும் இவரது சேவை, அன்று தென்னகத் திரை உலகிற்கு, மிகத் தேவையாக இருந்தது. கலைக்காகவே கடைசி மூச்சு வரை உழைத்த அந்த மேதை, தன் 100வது படத்தை மிகவும் பிரம்மாண்டமான முறையில் தயாரித்து, வெளியிட தீவிரமாக முயன்று, அதற்கான கதையையும் தேர்வு செய்து விட்ட நேரத்தில், எதிர்பாராத விதமாக, ஆக., 29, 1963-ல் இயற்கை எய்தினார்.

— முற்றும் —